# மூலிகையின் மகிமை-
# கூந்தலுக்கு இளமை- அளித்திடும்

# சூரஜ்

மூலிகையினால் உருவான
சீயக்காய் பவுடர்

**சூரஜ்-**

தேர்ந்தெடுக்கப்பட்ட உயர் மூலிகைகளால்
உருவானது. இதில் உள்ள இயற்கை
மூலப்பொருட்கள் கூந்தலுக்கு
ஆரோக்கியமும் மணங்கவரும் வாசனையும்
அளிக்கிறது. கூந்தல் கொட்டுவது, பொடுகு,
பரு, வியர்க்குரு, போன்ற தொல்லைகளிலிருந்து
விடுதலை. குளியலுக்கும் ஏற்றது.
தீங்கு விளைவிக்காதது. அனைவருக்கும் ஏற்றது.







விற்பனையாளர் :
காமதேனு டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்
(பி) லிட்.,

3, முருகப்பன் தெரு, யானைகவுனி, சென்னை-600 079.

ELEGANT

"எந்த ஓவல் மைதானத்தில் என் அதிகபட்ச டெஸ்ட் ரன்களைக் குவித்தேனோ, அதே ஓவல் மைதானத்தில் கடைசி டெஸ்ட் ஆடும் வாய்ப்புக் கிடைத்ததில் எனக்குப் பெரிய மகிழ்ச்சி!" என்று சொல்லி, ஆகஸ்டு 11 ஆம் தேதி, இங்கிலாந்தின் ஓவல் மைதானத்தில் கூடியிருந்த பதினேழாயிரம் ரசிகர்களிடமிருந்து விடைபெற்றார் -

விவியன் ரிச்சர்ட்ஸ்.

உலக கிரிக்கெட் சரித்திரத்தில் ஒரு சகாப்தம் முடிந்த அன்று, அத்தனை ரசிகர்களும் அப்படியே எழுந்து நின்று, மைதானமே அதிர்ந்து போகிற மாதிரி கைத்தட்டல் மரியாதை செய்தார்கள், பத்து நிமிடத்துக்கு.

'விவியன், எங்களைப் பிரிந்து போகிறாயே!' என்ற பேனர்களைச் சிலர் உயரப் பிடித்து உணர்ச்சிவசப்பட்டார்கள்.

"ஒரு விளையாட்டு வீரன் புகழின் உச்சியில் இருக்கிறபோதே ஓய்வு பெற்று விட வேண்டும். எனக்கு அந்தப் பேறு கிடைத்திருக்கிறது!" என்றார் ரிச்சர்ட்ஸ். ஒரு கையில் கிரிக்கெட் மட்டையையும், இன்னொரு கையில் தம் தொப்பியையும் உயர்த்திப் பிடித்தபடி நான்கு புறமும் ரசிகர்களைப் பார்த்து நன்றி தெரிவித்தார்.

விவியன் முதல் முதல் ஆடிய டெஸ்ட், பாகிஸ்தானுக்கு எதிராக 1973-ல். கடந்த பதினெட்டு வருடங்களாக, வெஸ்ட் இண்டீஸ் அணியில் தொடர்ந்து ஆடி வந்திருக்கிறார். குவித்த ரன்கள் 8540. ஆடிய டெஸ்ட் மாட்சுகள் 121. கடைசி ஓவல் டெஸ்ட்டில் சதம் போடுவதாகச் சொன்னார். ஆனால் அறுபதிலேயே 'அவுட்'டாகி விட்டார். அதனால் 24 செஞ்சுரிகளோடு நின்று விட்டது. ஆனாலும் ஆடிய மாட்சுகளில் எல்லாம் சராசரியாக ஐம்பதுக்குக் குறையாமல் ரன் எடுத்தவர் ரிச்சர்ட்ஸ்.

ஓவலுக்கும் ரிச்சர்ட்ஸுக்கும் நெருக்கம் அதிகம். இங்கேதான், 76-ல் இங்கிலாந்துக்கு எதிராகத் தமது அதிகபட்ச சாதனையான 291 ரன்கள் எடுத்தார். ஒரு டெஸ்ட்டில், 56 பந்துகளிலேயே சதம் போட்ட சாதனையும் செய்தவர் ரிச்சர்ட்ஸ்.

மேற்கிந்தியத் தீவைச் சேர்ந்த ஆன்டிகுவாவில் 52 ஆம் வருடம்



# அரசியலில் குதிக்கும் இன்னொரு கிரிக்கெட் வீரர்!

மிகச் சாதாரணமான விவசாயக் குடும்பத்தில், கூலித் தொழிலாளி லாரன்ஸ் ரிச்சர்ட்ஸின் மகனாகப் பிறந்தார். ஏழைமை காரணமாக, கல்லூரிப் படிப்பை சிரமப்பட்டே முடித்தார். ஆனால் அப்போதே கிரிக்கெட்டில் அசாத்திய ஆர்வம்.

எப்போதும் கலகலப்பாகவே பேசிக் கொண்டிருக்கும் ரிச்சர்ட்ஸ், மைதானத்தில் கூட சேஷ்டைகள் செய்து ரசிகர்களை மகிழ்விப்பதுண்டு.

விளையாட்டுத் துறையிலிருந்து விடைபெற்று விட்ட விவியன் ரிச்சர்ட்ஸ், அரசியலில் குதிக்கப் போகிறாராம். (பட்டோடியின் கதி ஆகக் கூடாது!) "அரசியலில் ஈடுபட்டு ஊழலை ஒழிக்கப் போகிறேன். என் நாட்டு மக்கள் என் மீது பெரும் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள்!" என்கிறார் ரிச்சர்ட்ஸ்.

- சித்தார்த்.

◆ மாதுரி திக்ஷித்





# பம்பாய்த் திரையுலகில் ஒரு மௌனப் புரட்சி!



◆ ராஜ்குமார் சந்தோஷி ஃபிலிம்ஃபேர் பரிசு பெறுகிறார்

இருபது, முப்பது ஆண்டுகளுக்கு முன், பம்பாய்த் திரை உலகில் கொடிகட்டிப் பறந்தவர்கள் முக்கியமாக ஓர் அரை டஜன் டைரக்டர்கள்! அவர்கள்தாம் சாந்தாராம், ராஜ்கபூர், மன்மோகன் தேசாய், பிரகாஷ் மெஹ்ரா, பி. ஆர். சோப்ரா, தேவ் ஆனந்த் ஆகியோர். அவர்களை அன்று 'இந்தியக் கனவுலக வியாபாரிகள்' என்றார்கள்! அவர்கள் விதவிதமாகக் கற்பனை உலகங்களைப் படைத்தார்கள்! சராசரி இந்தியனை விண்ணில் மிதக்க வைத்தார்கள். அவர்களது விசிறிகள் அவர்கள் நடந்த மண்ணையும் முத்தமிடத் தயாராக இருந்தார்கள்.

பம்பாய்த் திரைவானம் இன்று முற்றும் மாறி விட்டது. ஒரு மௌனமான புரட்சியே நடந்து கொண்டிருக்கிறது! முற்றிலும் புதிதான மூன்று பேர் இயக்குனர்களாகத் திரையுலகை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள்தாம் எஸ். சந்திரா, மகேஷ் பட், ராஜ்குமார் சந்தோஷி ஆகியோர்.

சந்திரா, பம்பாய் ஒர்லிப் பகுதியில் 'ஜோப்டி' எனப்படும் குப்பப் பகுதியிலிருந்து, திரையுலகுக்கு வந்தவர். வறுமையின் கொடுமையை நன்கு அறிந்தவர். அவர் இயக்கிய முதல் படம் 'ஆங்குர்ஷ்'. அது மகத்தான வெற்றியை அடைந்தது. இவரைப் போன்ற அனேகர் விண்மீன்களாகத் தோன்றி, மின்மினிகளாக மறைகிறார்கள் என்பது உண்மையே. ஆனால் சந்திரா அடுத்தடுத்து பிரதிகாத், தேஜாப் என்ற வெற்றிப் படங்களை ஆக்கித் தந்தார். அனில் கபூர், மாதுரி திக்ஷித் போன்ற



◆ சந்திரா

◆ ராஜ்குமார் சந்தோஷி



வர்களிடம், விசிறிகள் வெறியே கொள்ளும் அளவுக்கு அவர்களைப் புகழேணியில் ஏற்றி விட்டவர் சந்திரா.

இதே போல் 'ஆஷிக்கி', 'தில் ஹை கி மந்தா நஹீன்' போன்ற சிறப்புப் படங்களை இயக்கினார் மகேஷ் பட். இன்று திரையுலகில் இவருக்கு ஏகப்பட்ட டிமாண்ட்.

சென்ற ஆண்டு வரை ராஜ்குமார் சந்தோஷி என்பவர் யார் என்பதே தெரியாமல் இருந்தது. 'காயல்' என்ற ஓர் உன்னத வெற்றிப் படத்தைத் தந்த பிறகு, இவர் பெயர் இன்று எங்கும் பேசப்படுகிறது. அந்தப் படம் இவருக்கு இயக்குனருக்கான ஃபிலிம் ஃபேர் பரிசையும் பெற்றுத் தந்தது.



★ மகேஷ் பட்

இவர்களது வெற்றியின் அடிப்படை என்ன?

''எனது கதாநாயகனை நான் ஒரு சாதாரண மனிதனாகக் காட்டுகிறேன். அநேக படங்களில் ஹீரோ, பத்துப் பேரோடு சண்டைப் போட்டு வீழ்த்தினாலும் அவன் உடலில் ஒரு கீறல் கூட இருக்காது. இது உண்மைக்கு முற்றிலும் புறம்பானது. என் படத்தில் கோதாவில் இறங்கும் கதாநாயகன் அடி கொடுப்பான்; அடி பெறவும் செய்வான். அவன் ஒரு சூப்பர்மேன் இல்லை! ஆசாபாசங்கள் நிறைந்த ஒரு சாமானியன். அதனால் ரசிகர்கள் என் கதாநாயகனோடு தங்களை ஒப்பிட்டு, அவனோடு ஐக்கியப் படுத்திக் கொள்கிறார்கள்'' என்கிறார் சந்தோஷி.

''சினிமாக்கள் நிஜ வாழ்க்கையைப்



★ தேவ் ஆனந்த்

பிரதிபலிப்பவையாக இருக்க வேண்டும். பார்ப்பவர்கள் நம்பும்படியாக இருக்க வேண்டும். நான் வறுமையில் வாடும் ஓர் ஏழையைப் பற்றிப் படம் எடுத்தால், அவன் ஏழைகளோடு வசித்து, அவர்களோடு உண்டு, அவர்களோடு வாழ்பவனாக இருப்பான். அண்மையில் பசியால் வாடும் மூன்று இளைஞர்களைப் பற்றிய படம் ஒன்று பார்த்தேன். அதில் ஓர் இளைஞன் நல்ல உயர்ந்த ரகக் கம்பளி விரிப்பில் படுத்திருக்கிறான்! மற்றொருவன் கரடி பொம்மை ஒன்றைக் கையில் பிடித்திருக்கிறான். இவை நம்பும்படியாகவா இருக்கின்றன? நகைப்புக்கு இடமளிக்கவில்லையா?'' என்கிறார் சந்திரா.

''இவரது படங்களில் வன்முறைச் சம்பவங்கள் அதிகம். அதனால்தான் இவரது சமீபத்திய படைப்பான 'நரசிம்மா' எதிர்பார்த்த அளவு வெற்றியடையவில்லை'' என்கின்றனர் சிலர்.

ஆனால் சந்திராவோ, ''நான் கீழ்மட்ட பம்பாய்வாசிகளோடு வாழ்ந்தவன். இங்கு வன்முறை எந்த அளவுக்குத் தலைவிரித்தாடுகிறது என்பது எனக்கு நிதர்சனமாகத் தெரியும். உண்மையில் நடப்பதில் ஐந்து சதவீதம் வன்முறை கூட என் படத்தில் இல்லை'' என்கிறார்.

மகேஷ் பட்டின் படங்கள் ரசிகர்களின் உள்ள உணர்வுகளை மெல்லிய மயிலிறகால் வருடுவது போன்றவை. இவருக்கு வித்தியாசமான காதல் கதைகள், உணர்ச்சிபூர்வமான கதைகள் இவைதான் மிகவும் பிடிக்கும். ''ஒரு படம் பார்ப்பது பாப்கார்ன் கொறிப்பது போல் இருக்க வேண்டும். அது உங்களை வேதனையில் ஆழ்த்தக் கூடாது'' என்கிறார் பட்.

இவர்கள் மூவரும் பெற்ற வெற்றியினால், இன்று முன்னணியில் இருக்கும் இந்தி நடிக, நடிகையர்கள் அனைவரும் இவர்கள் டைரக்ஷனில் நடிக்கப் போட்டியிடுகின்றனர்.

- ராஜீவி நரசிம்மன்.

* மீராவாக : இசையிலும் இயலிலும் பக்தி.



# எம்.எஸ்.-75

'எம். எஸ்.' - கேட்டவுடனேயே கண்களில் ஆனந்தத்தையும் மனத்தில் பூரிப்புடன் கூடிய மரியாதையையும் உண்டாக்கும் மந்திர எழுத்துக்கள். இந்த மாபெரும் கலைஞருக்கு இவ்வாண்டு செப்டம்பர் 16 ஆம் தேதி 75 வயது பூர்த்தியாகிறது. வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் பட்டை தீட்டிய வைரமாக ஜொலித்த இவர், இன்று ''மிக உன்னதமான நிலையை எய்திய ரிஷி'' என்று வர்ணிக்கிறார், பன்னிரண்டு வயது முதல் எம். எஸ். ஸின் பாட்டைக் கேட்டு வரும் செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யர். எம். எஸ்.ஸின் பண்புகள் வானவில்லின் வண்ணங்கள்.

* அன்னை சண்முகவடிவு



### அன்னையின் அரவணைப்பில்

'சாதாரணமான குரலை உடைய குழந்தையின் மழலையே அக் குழந்தையின் பெற்றோர்களுக்கு யாழையும் குழலையும் விட இனியதாகத்தான் இருக்கும். வீணையைக் காட்டிலும் இனிய குரலை ஒரு குழந்தை உண்மையிலேயே இறைவன் அருளால் பெற்றிருக்குமானால்... அக் குழந்தையின் அன்னைக்கு எவ்வளவு ஆனந்தத்தை அளிக்கும். அதிலும் அந்த மாதரசி வீணை வாத்தியத்தை நன்கு பயின்று நாதோபாசனை செய்து வந்தவரானால், அவர் எத்தகைய பாக்கியத்தைச் செய்த புண்ணியவதி ஆவார்....

அத்தகைய பாக்கியசாலியான அன்னை, மதுரை மாநகரைச் சேர்ந்த ஸ்ரீமதி வீணை சண்முக வடிவு அம்மாள் அவர்கள்.

இன்று அகில இந்தியாவிலும் புகழ்பெற்று விளங்கும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களைப் பெற்றெடுத்துச்

❖ நண்பரும் வழிகாட்டியு மான பிரதம ரசிகர்



சங்கீத உலகத்துக்கு வழங்கிய பெருமை வாய்ந்த பெண்மணி ஸ்ரீமதி சண்முக வடிவு அம்மாள் தான்.

'வீணை சண்முக வடிவு அம்மாள்' என்ற தலைப்பிலான கட்டுரையில் கல்கி அவர்கள் 1954 இல் எழுதியது இது. கல்கி பத்திரிகையில் இடம் பெற்ற இக் கட்டுரையில், 'குஞ்சு' என்ற செல்லப் பெயரால் அழைக்கப் பட்ட குழந்தை சுப்புலக்ஷ்மியின் இசை ஞானம் வளர, அவள் தாயார் எடுத்துக் கொண்ட முயற்சிகள் விவரிக்கப்பட்டுள்ளன.

'குழந்தைக்குப் பத்து வயது பூர்த்தி ஆவதற்குள்ளேயே தம்முடன் கச்சேரி மேடைகளில் அமர்ந்து தமக்கு உதவியாக அவ்வப்போது பாடும்படி செய்தார்.... தம்மை விடத் தம் குழந்தைகள் கலைத் துறையில் சிறப்படைந்து புகழ் பெறுவதைப் பார்க்கும் பாக்கியம் உலகில் சிலருக்குத்தான் கிடைக்கக்கூடும். அந்த பாக்கியம் தமக்குக் கிடைக்கப் போகிறதென்பதை ஸ்ரீமதி சண்முக வடிவு உணர்ந்து கொண்டார்...

...கிராம போன் கம்பெனியார் ஸ்ரீமதி சண்முக வடிவு அவர்களை இசைத் தட்டுப் பதிவு செய்வதற்காக அழைத்த போது, தமது பத்து வயதுக் குமாரியையும் அழைத்துச் சென்றார்... குழந்தையின் பாட்டு ஒன்றையும் பதிவு செய்வதற்கு ஏற்பாடு செய்தார். அன்னை கற்பித்திருந்த 'மரகத வடிவும்' என்று தொடங்கும் செஞ்சுருட்டி ராகப் பாடலைப் பத்து வயது நிரம்பாத குழந்தை பாடினாள். தாயாரைத் திருப்தி செய்வதற்காகக் கிராமபோன் கம்பெனியாரும் அப் பாட்டைப் பதிவு செய்து கொண்டார்கள். ...ஆறு கட்டை சுருதியில் குழந்தை சுப்புலக்ஷ்மி பாடியிருந்த அந்த இசைத் தட்டு வெளியான பிறகு, சில காலம் தமிழ் நாடெங்கும் அந்தப் பாட்டு உச்சஸ்தாயியில் ஒலித்துக் கொண்டிருந்தது.

இதற்குப் பிறகு ஸ்ரீமதி சண்முக வடிவு அம்மாளுக்குத் தமது குமாரியின் முன்னேற்றமே முக்கிய மனோரதமாயிற்று.... தமது குமாரியின் புகழையே தமது புகழாகக் கருதி மகிழ்ந்து வந்தார்....''

- இவ்வாறு எழுதிய 'கல்கி', 'கடந்த வாரத்தில்' மதுரையில் ஸ்ரீமதி எம்.எஸ். ஸின் கச்சேரி நடந்த போது, ஸ்ரீமதி சண்முக வடிவு அம்மாளுக்கு மாலை அணிவிக்கப் பட்டதையும் அந்த அம்மாள் அம் மாலையைத் தமது புதல்விக்குத் திரும்பப் போட்டு ஆனந்தக் கண்ணீர் பெருக்கியதையும் வர்ணித்துக் கட்டுரையை முடிக்கிறார்.

## உலகம் போற்ற உயர்த்திய கணவர் :

உன்னதமான சங்கீதப் பரம்பரையில் பிறந்தது ஸ்ரீமதி எம். எஸ். செய்த முதல் பாக்கியம் எனில், திரு. சதாசிவத்தைக் கணவராக அடைந்தது அதனினும் பெரிய பாக்கியம். இதனை உணர்ந்திருப்பதோடு, தமக்கு ஒவ்வொரு சிறப்பு வந்தடையும் சந்தர்ப்பத்திலும் எம். எஸ். மனம் விட்டுச் சொல்லவும் செய்வார் - அன்பும் நன்றியும் கலந்த, நெகிழ்ந்த குரலில்.

''1940 இல் எம். எஸ்., சதாசிவத்தை மணந்தார். அப்போது முதல் அவருடைய நண்பராக, குருவாக, வழிகாட்டியாக இருந்து வருபவர் சதாசிவம்தான்'' என்று எழுதுகிறார் நாராயண மேனன். (சங்கீத நாடக அகாடமியின் முன்னாள் செயலர்).

மூத்த சங்கீத வித்வான் என்பதோடு, திரு. சதாசிவத்திடம் சகோதர வாஞ்சையுடன் 1933 முதல் பழகி வரும் செம்மங்குடி கூறுகிறார் :

''மகாத்மா காந்தி முதல் கார்பசோவ் வரை உலகின் மிகப் பெரிய தலைவர்களும் மதித்துப் போற்றும்



❖ காந்திஜியுடன் பிரார்த்தனைக் கூட்டத்தில் சதாசிவம் தம்பதி



◆ ஆரம்ப நாட்களில்...

நிலையை அந்த அம்மாளுக்கு ஏற்படுத்தித் தந்தவர் அவர் கணவர்தான். மிகக் கவனமாக, கண்ணும் கருத்துமாக அவளைக் கவனித்துக் கொண்டு வருகிறார் என்பதோடு அவளது ஆற்றலைப் புரிந்து கொண்டு, அவள் வளர்ச்சிக்கு எத்தனையோ முயற்சிகளை எடுத்துக் கொண்டிருக்கிறார்.''

மனைவியின் ஆற்றலைப் புரிந்து கொண்டவர் மட்டுமல்ல... திரு. சதாசிவம் ஒரு மாபெரும் ரசிகரும் கூட. திருமதி. எம். எஸ். ஸின் ஒவ்வொரு கச்சேரியிலும் முன் வரிசையில் அமர்ந்து அந்த இசையில் அவர் கரைந்து நெகிழ்வதை இசை ரசிகர்கள் கவனிக்கத் தவறியதில்லை. திருமதி. எம். எஸ். ஸும் இந்தப் பிரதம ரசிகரிடமிருந்து பலம் பெற்று மேலும் மேலும் சோபிக்கிறார் என்று தோன்றும்.

கச்சேரிகளின் போது ஒலிபெருக்கி சரியாக உள்ளதா என்பது போன்ற விஷயங்களைக் கண்டிப்புடன் கவனிப்பதோடு, ரசிகர்களின் மனநிலைக்கும் சந்தர்ப்ப சூழ்நிலைக்கும் ஏற்ப, சில பாடல்களைப் பாடச் சொல்லி, முதல் வரிசையிலிருந்தபடியே ஜாடையில் உணர்த்துவார் திரு. சதாசிவம். பாட்டில் லயித்துத் தோய்ந்து போயிருந்தாலும் எம். எஸ். இந்தக் குறிப்புகளைப் புரிந்து கொண்டு செயல்படுத்துவார். அதற்கு அமோகமான வரவேற்பும் கிட்டும்.

## இறைவன் அருளிய இசை வல்லமை :

இசைக் குடும்பத்தில் பிறந்து, இணையற்ற ஆதரவாளரான கணவரைப் பெற்றதற்கும் மேலான பாக்கியம் ஒன்று எம். எஸ். அவர்களுக்கு உண்டு. தெய்வ அருளால், இயல்பான சங்கீத ஞானமும் ஆற்றலும் பெற்றுள்ள பாக்கியம்தான் அது. இந்த ஆற்றல்தான் இசை நுணுக்கம் அறிந்தவர் அறியாதவர் என்று பாகுபாடின்றி அனைவரையும் ஆகர்ஷித்து மெய்மறக்கச் செய்கிறது.

'' 'ஹரி தும ஹரோ'வை (மீரா பஜன்) வேறு பாடகர் பாடிக் கேட்பதைக் காட்டிலும் எம். எஸ். வெறுமனே உச்சரிக்கக் கேட்பதையே விரும்புகிறேன்'' என்று ஒரு சமயம் மகாத்மா காந்தி கூறிய வார்த்தைகள் சரித்திரப் பிரசித்தி பெற்று விட்டன.

விஷயம் தெரிந்த இசை விமர்சகரான கே. வி. கிருஷ்ணசாமி அய்யர் எழுதியுள்ளது இது :

''ராகஆலாபனையோ, கீர்த்தனையோ, நிரவலோ, ஸ்வர கற்பனையோ... எதுவாகிலும் சரி, (எம். எஸ்) பாடும் போது எடுப்பாகவும் அழகான இனிமை ததும்பவும் ஒலிக்கின்றன...

''... அகாரங்கள், பிருகாக்கள், ரவைஜதி சங்கதிகள் - இவை பிரமிக்க வைக்கும் கச்சிதத்துடன் ஒளிர்கின்றன.''

''அந்த அம்மாள் குரலில் ஒரு விசேஷம் - 'மைக்' இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒரே மாதிரியான சுத்தம், துல்லியம், காத்திரம்...'' என்று வியப்புடன் கூறுகிறார் செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யர்... ''விச்ராந்தியா ராகம் பாடுவது அவருக்கே கைவந்த கலை. நின்று நிலைத்து, மனத்தில் பதியும் படியாகப் பாடுவார். வடக்கத்தி சங்கீதம் பாடுவதற்கும் ஏற்ற குரல் அவருடையது. ரொம்ப சுகமான சங்கீதம் என்பதோடு எதையுமே ஒரு முறை கேட்டவுடன் மனத்தில் வாங்கிக் கொண்டு திரும்பப் பாடும் வல்லமை அவருக்கு இருப்பதை நான் பார்த்திருக்கிறேன்...

''அவரது ஆரம்ப நாளைய கச்சேரி ஒன்றில் தக்ஷிணாமூர்த்தி பிள்ளையும் நானும் அருகருகே அமர்ந்து கேட்டுக் கொண்டிருந்தோம். கச்சேரி முடிந்ததும், 'ஆண்டவனே! பந்து அபிமானம், தேச அபிமானம் எல்லாம் தாண்டின சங்கீதம் இது...' என்று என்னிடம் நெக்குருகிக் கூறினார் தக்ஷிணாமூர்த்தி பிள்ளை...''

## பாரதத்தின் கலாசார தூதுவர்

தக்ஷிணாமூர்த்தி பிள்ளை தீர்க்கதரிசி. அவர் கூறியதைப் போலவே இன்றைக்கு எம்.எஸ்.ஸின் குரல் தேச, சர்வதேச எல்லைகளுக்கு அப்பாற்பட்ட சொத்தாகக் கருதப்படுகிறது. இந்தியாவின் கலாசார தூதுவராக உலகமெங்கும் சென்று பாடி இதயங்களைக் கவர்ந்து திரும்பியிருக்கிறார். ஐ. நா. சபையின் அரங்கில் இவர் பாடுவதற்கென்று 'மைத்ரீம் பஜத' என்ற உலக அமைதி வேண்டும் கீதத்தைக் காஞ்சி பரமாச்சாரியார் இயற்றித் தந்தார். அந்தப் பாடலைப் பாடா

# சக்தி நவராத்ரி - 91
# (நான்காம் நாள்)

**அருள்மிகு அருணாசலேஸ்வரர் உடனுறை அருள்மிகு அபீத குசாம்பாள் அருளாட்சி செய்து வரும் திருஅண்ணாமலையில் 11.10.91 வெள்ளிக் கிழமையன்று சென்னைவாழ் மகளிர் அணியினால் உலக நலன் குறித்து 108 திருவிளக்கு பூஜை நடைபெறுகிறது. இதில் பங்கு கொள்ள விரும்பும் பெண்டிர் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி : வி. பாலசுப்பிரமணியன், 22, கிழக்கு மாடவீதி, மைலாப்பூர், சென்னை - 4. போன் 72819.**

மல் எம். எஸ். எந்தக்கச்சேரியையும் நிறைவு செய்வதில்லை.

### இசையிலும் இயல்பிலும் துலங்கும் பக்தி :

பரமாச்சாரியாளின் கனிவான பார்வையும் அருளாசியும் எம். எஸ். ஸுக்குக் கிடைத்தனவென்னில் அதற்குக் காரணம் அவருடைய இசையிலும் இயல்பிலும் துலங்குகின்ற அபரிமிதமான பக்தியே. இந்த பக்தி காரணமாகத்தான் செம்மங்குடி இவரை 'ரிஷி' என்றும் லதா மங்கேஷ்கர் இவரைத் 'தபஸ்வினி' என்றும் குறிப்பிடுகின்றனர். இத்தகைய பக்தி ரஸம் ததும்பப் பாடுவது தன்னை மறந்து நாத ப்ரும்மத்துடன் ஐக்கியமாகும் நிலையிலேயே சாத்தியம்.

எம். எஸ். ஸின் பக்தி அவருடன் வளர்ந்து பக்குவ நிலையை அடைந்துள்ளது. இளமைப் பருவத்திலேயே அதன் அறிகுறிகளைக் கண்டு 'மீரா யாத்திரை' என்ற கட்டுரையில் எழுதினார் 'கல்கி'. 'மீரா' படப்பிடிப்புக்காக வடநாட்டில் சுற்றுப் பயணம் செய்த போது ஏற்பட்ட அனுபவங்களின் தொகுப்பே அக் கட்டுரை. சில பகுதிகள் :

'சித்தூரில் கிரிதாரியின் சந்நிதியில் அமர்ந்து ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி மீராவின் கீதங்களைப் பாடிய போது, 'இதே இடத்தில் தேவி மீரா அமர்ந்து, இதே பாடல்களைப் பக்திப் பரவசமாகப் பாடியிருக்கலாம் அல்லவா?' என்ற எண்ணமே எல்லோருடைய மனத்திலும் குடிகொண்டிருந்தது. எனவே பாடும் போது எம். எஸ். ஸும் கண்ணீர் விட்டு விட்டார். மற்றவர்களின் கண்களிலும் நீர் துளித்தது...

'... துவாரகையின் கோயில் படிகளின் மீது மீரா ஏறி, கண்ணன் சந்நிதியில் கதறிக் கொண்டு நுழைந்து, உணர்வற்று விழுகிற காட்சியில் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி உண்மையாகவே உணர்விழந்து விழுந்து விட்டார்...'

கல்கி இந்தச் சம்பவங்களை ஒரு கதாசிரியராக அல்லாமல் கட்டுரை ஆசிரியராக, மிகையின்றி விவரித்தார் என்பதை மீரா படத்தைப் பார்ப்போர் உணர்வார்கள். இப்படம் கடந்த வருடம் திரைப்பட விழாவில் திரையிடப்பட்ட போது, அதன் முடிவில் மனமுருகிக் கண்ணீர் சிந்திய ஒரு முன்னணி நடிகரை அருகிலிருந்தோர் சிரமப்பட்டுச் சமாதானப்படுத்தியது சமீபத்திய சரித்திரம்.

### மனம் குளிர்விக்கும் மனிதப் பண்பு :

எம். எஸ். ஸின் ஆளுமையில் புடம்



போட்டது போல் ஒளிர்வது அவருடைய உயரிய பக்திதான். எனினும், இதனால் அவர் எட்டாத உயரத்திற்குச் சென்று விடவில்லை. சின்னச் சின்ன விஷயங்களிலும் மனம் லயிக்கும் பண்பாளர் - கச்சேரி கூட்டத்தில் அவசரமாக மேடை நோக்கி நடக்கும் போதும் கண்ணில் தென்படும் உறவினர் அல்லது நண்பரை மறவாமல் ஒரு கணமேனும் நின்று விசாரிப்பார். வீட்டுக்கு வரும் குழந்தை முதல் வி.ஐ.பி. வரை அனைவரையும் பொறுமையாக, இன்முகத்துடன் வரவேற்று உபசரிப்பார்.

தமக்கென்று கொண்டுள்ள நியம நிஷ்டை, விரதங்களை எந்த ஊரிலிருந்தாலும் எந் நேரத்திலும் கடைப்பிடிப்பார். பூஜை அறையில் கோலம் போடாமல் ஒரு காலைப் பொழுதும் நாள் குறிப்பு எழுதாத ஓர் இரவும் இவர் வாழ்வில் கடந்ததில்லை. இந்த சிரத்தையும் நியமமும் சங்கீதத்திலும் உண்டு. வித்வத் சபையில் பாடும் அதே சிரத்தையுடன்தான் நண்பர் வீட்டுக் கல்யாணத்தின் கன்னூஞ்சலிலும் பாடுவார்.

''இன்றைக்கும் தன்னை ஒரு வித்தியார்த்தியாகவே எண்ணிக் கொள்ளும் அவருடைய அடக்கம் அலாதியானது'' என்கிறார் செம்மங்குடி. ''என்னைத் தமது குரு என்று சொல்லிக் கொள்கிறார் அந்த அம்மாள். அது அவருடைய தன்னடக்கம் தான். அந்தப் பெருந்தன்மை என்னைப் பெருமைப்படுத்துகிறது. தனக்கென்று எதையுமே விழையாத ஒரு பெண்மணியைப் பார்க்க முடியுமா...? அத்தகைய பெண்மணி எம். எஸ். மட்டும்தான்.''

### இசைக்குத் தொண்டு; இசையால் தொண்டு

எம். எஸ். இன்றைக்கும் தேடிச் செல்வது இசைச் செல்வத்தை மட்டுமே. அதையும் தமக்காக அவர் தேடவில்லை.

பிறருக்கு வாரி வழங்குவதற்காகவே நாடிச் செல்கிறார்; இன்றைக்கும் வித்யார்த்தியாக விளங்குகிறார். பல நல்ல காரியங்களுக்குப் பொருள் சேர்க்க அவர் கச்சேரிகள் நிகழ்த்தியுள்ளது அனைவருக்கும் தெரியும். அந்தக் கச்சேரிகளை 'M.S. The Queen of Song' என்ற வெளியீட்டில் மூன்று பக்கங்களுக்குப் பட்டியலிட்டுள்ளது மியூசிக் அகாடமி! இந்தப் பட்டியலில் அடங்காத வேறு எத்தனையோ கணக்கற்ற தான தர்மங்களையும் செய்துள்ளனர் எம். எஸ். - சதாசிவம் தம்பதி. கச்சேரி சன்மானங்கள், இசைத் தட்டு ராயல்டி தொகை, விருதுடன் வரும் பரிசுத் தொகைகள் எனக் கணக்கிலடங்காத தொகைகளை இந்தியா எங்கிலும் சமூகப் பணியாற்றும் நிறுவனங்களுக்கும் ஏழைமையில் வாடும் தனி நபர்களுக்கும் வழங்கியிருக்கிறார்கள்.

''சதாசிவத்துக்குத் தெரியும் இந்த இசை தெய்வீகமானது; ஈச்வரார்ப்பணம் செய்யப் பட வேண்டியது என்று... அதனால் கணவனும் மனைவியும் சங்கல்பம் செய்து கொண்டு தான தர்மம் செய்து வருகிறார்கள்'' என்கிறார் செம்மங்குடி. இந்த அரிய தம்பதி இசை மூலம் சேவை செய்வதோடு இசைக்கும் சேவை செய்துள்ளதை நினைவூட்டுகிறார்: ''எத்தனையோ சுலோகங்கள், ஸ்தோத்திரங்கள், பாடல்களை ஒலிப்பதிவு செய்துள்ளார் எம். எஸ். இவையெல்லாம் எதிர்காலத் தலைமுறைகளுக்குரிய பொக்கிஷங்கள். அவற்றுள் மிகப் பெரிய பொக்கிஷம் மேள ராக மாலிகை இசைத்தட்டுதான். இதன் மூலம் கிடைக்கும் ராயல்டி தொகையைக் கூட சென்னை மியூசிக் அகாடமிக்குத்தான் வழங்கியிருக்கிறார்கள்.''

'கல்கி' படைத்த 'மாலைப் பொழுதினிலே' பாடலை எம். எஸ். இசைத் தட்டாக வழங்கிய போது ரசிகமணி டி. கே. சி. எழுதினார்: 'இந்த இசைத் தட்டு தமிழர்களுக்கு வாய்த்த இன்னொரு யோகம்.'

தமிழிசை இயக்கத்துக்கு எம். எஸ். - சதாசிவம் தம்பதி செய்துள்ள தொண்டினை 'கல்கி' நன்றியுடன் குறிப்பிட்டார் :

''தமிழிசை இயக்கத்துக்கு ஆதரவு தந்து உதவி புரிந்தவர்கள் எத்தனையோ பேர் இருக்கத்தான் செய்கிறார்கள். எனினும் தமிழிசை இயக்கம் மிகத் தீவிரமான எதிர்ப்புக்கு உள்ளாகி இருந்த போது, அது அடியோடு விழுந்து விடாமல் தாங்கி நின்று நிலைநாட்டியவர்கள்... என் னு டை ய நண்பர் ஸ்ரீ சதாசிவமும் அவருடைய மனைவியார் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களும்தான்...

''..ஸ்ரீமதி எம். எஸ். பழைய கர்நாடக சங்கீத வித்வத் பரம்பரையைச் சேர்ந்தவர். ...அத்தகையவர் தமிழிசை இயக்கத்தின் நியாயத்தை உணர்ந்து, உற்சாகத்துடன் அவ்வியக்கத்தில் ஈடுபட்டார். புதிது புதிதாகப் பல தமிழ்க் கீர்த்தனங்களைக் கற்றுக் கொண்டும், தாமாகவே மெட்டுகள் அமைத்துக் கொண்டும் கச்சேரிகளில் பாடிப் பிரபலப்படுத்தினார்.''

**பொது** வாழ்வில் பிரவேசித்தது முதல் எம். எஸ். எத்தனையோ நிதிகளைத் திரட்டிக் கொடுத்திருந்தாலும் அவர் திரட்டிக் கொடுத்த முதல் நிதி கல்கி பத்திரிகையின் ஸ்தாபகத்துக்காகத்தான். இதனை சதாசிவம் அவர்களே குறிப்பிட்டுள்ளார் :

''சுப்புலக்ஷ்மி 'சாவித்ரி' படத்தில் நாரதர் வேடத்தில் நடித்தாள். 'Charity begins at home' என்ற ஆங்கிலப் பழமொழிக்கு ஏற்ப இப் படத்தின் மூலம் கிடைத்த நிதியைக் கொண்டே கல்கி பத்திரிகையை, எனது நண்பர் கிருஷ்ணமூர்த்தியுடன் இணைந்து ஆரம்பித்தேன்... இந்த வகையில் சுப்புலக்ஷ்மியும் கல்கி நிறுவனத்தின் ஸ்தாபகர்களுள் ஒருவர் என்றுதான் கூறுவேன்...''

கல்கியின் பொன் விழா ஆண்டில் பவழ விழா காணும் அதன் ஸ்தாபகர் திருமதி. எம். எஸ். ஸை வணங்கி வாழ்த்துகிறோம். திரு. சதாசிவம் - திருமதி எம். எஸ். தம்பதியின் ஆயுள் ஆரோக்கியத்துக்கு எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறோம்.

தொகுப்பு : சீதா ரவி

அட்டை வண்ணப்படம் : யோகா

## அடுத்த இதழில்...



- குடைகள் வந்த கதை!
- வங்கிகளில் நடக்கும் மோசடிகள்
- சிறுமி அமீனாவின் சோகக் கதை.....

நாங்க கொடுக்கிற
கல்வி சொத்தை
இருந்தாலும் நீங்க
ஒழுங்கா
நடந்துக்கணும்!
ஜெயலலிதா
அறிவுரை வழங்க
ஒரு தகுதி
வேண்டாமா
கல்லூரி
தேர்தல்
படிச்சா மட்டும்
வேலை காத்துக்கிட்டு
இருக்காக்கும் ?






# மேக்-அப் போட்ட பட்ஜெட்!

அழகற்றவர்களைக் கூட மேக்-அப் கலைஞர்கள் அசாதாரண அழகிகளாகத் திரைப்படத்திலும் டிவியிலும் உலவ விடுகிற இந் நாளில், தமிழக பட்ஜெட்டும் மேக்-அப் போட்டுக் கொண்டு வந்திருப்பதில் வியப்பில்லை. நிதி அமைச்சர் பூசியுள்ள அரிதாரத்தை நீக்கி விட்டுப் பார்த்தால் பட்ஜெட்டின் உண்மை சொரூபம் தெரியும்.

அரசியல்வாதிகள் தேர்தலின் போது ஏதேதோ வாக்குறுதிகளை அள்ளி விடுகிறார்கள். ஆட்சிக்கு வந்த பிறகு அவற்றை நிறைவேற்றி வைக்கும் நிர்ப்பந்தத்துக்கு உள்ளாகிறார்கள். சமுதாய நலத் திட்டங்கள் என்பது சுதந்திர ஜனநாயக நாட்டில் ஓர் அளவோடுதான் இருக்க வேண்டும். மருத்துவ வசதி, கல்வி வசதி போன்ற சில இதில் அடங்கும். மற்றபடி தொழில் - விவசாய வளர்ச்சிக்கு உதவுபடியான அடிப்படைத் தேவைகளையே - மின்சாரம், நீர்ப்பாசனம், சாலைகள் போன்றவை - அரசு கவனிக்க வேண்டும். இதனால் தொழில்வளமும் வேலை வாய்ப்புக்களும் பெருக, மக்கள் உழைத்துப் பாடுபட்டுச் சம்பா தித்துத் தங்களை உயர்த்திக் கொண்டு, அத்துடன் கூடவே இயல்பாக நாட்டையும் உயர்த்த வேண்டும். இதுதான் சுதந்திரப் பொருளாதாரத்தின் அடிப்படை.

ஆனால் இங்கு சோஷலிஸம் என்ற மாயைக்கு ஆட்பட்டு, சமுதாய நலத் திட்டங்கள் என்று ஆரம்பித்து விட, அது பூதாகாரமாக வளர்ந்து விட்டிருக்கிறது. எல்லாவற்றையும் அரசு இலவசமாகச் செய்து தர வேண்டும் என்ற மக்களின் ஆசையும் எதிர்பார்ப்பும் அதிகரித்து விட்டன. அடுத்தடுத்து வரும் நிதி அமைச்சர்களும் முதல்வர்களும் வோட்டு அறுவடை கருதி, இத்தகைய சலுகைகளை அதிகரித்துக் கொண்டே போகின்றனர். இலவச மின்சாரம் முதல் இலவச அரிசி வரை பலவற்றை இப்படி அளிக்கும் போது, தொழில் வளர்ச்சிக்கான அடிப்படைத் தேவைகளைக் கவனிக்க முடியாமல் கணக்கம் ஏற்படுகிறது. மேலும் மேலும் வரிகள் விதிக்கப்படுகின்றன.

இதைத்தான் தற்போது நெடுஞ்செழியன் சமர்ப்பித்துள்ள தமிழக பட்ஜெட்டும் செய்துள்ளது. 70 கோடிக்குப் புதிய வரிகள் விதித்த பிறகும் 575 கோடி பற்றாக்குறை பட்ஜெட்டைத்தான் சமர்ப்பித்திருக்கிறார். பற்றாக்குறை இருக்கிறது என்பதால் செலவினங்கள் நின்று போகாது. ரிஸர்வ் வங்கியில் கடன் வாங்கி அரசு செலவு செய்யும்.

இலவசத் திட்டங்கள் பலவற்றுக்கு நிதி ஒதுக்கியது தவிர, பல இனங்களில் வரிகளைக் குறைத்தும் இருக்கிறார் நிதி அமைச்சர். தையல் இலைக்கு வரி இல்லை, மிளகாய், புளி, மஞ்சளுக்கு வரி குறைப்பு, மொப்பெட்டுக்கு வரி இல்லை என்றெல்லாம் பட்ஜெட்டில் சில சலுகைகள் காட்டப் பட்டுள்ளன. இவையெல்லாம்தான் பட்ஜெட்டை அழகுபடுத்தும் மேக்-அப் பூச்சுக்கள். இவற்றைக் கழுவித் துடைத்து விட்டால் பட்ஜெட்டின் உண்மை சொரூபம் தெரியவரும்.

அன்றாட வாழ்க்கைக்கு இன்றியமையாததான காகிதம், சோப்பு இவற்றின் மீது கூடுதல் விற்பனை வரி விதித்தது ஒருபுறம் இருக்கட்டும். மோட்டார் வாகனங்கள், டீசல் ஆகியவற்றின் மீது கூடுதல் வரி விதிப்புத்தான் பயங்கர வில்லன். இவை, போக்குவரத்துச் செலவை ஏகமாக உயர்த்தி, விலைவாசிகள் மேன் மேலும் அதிகரிக்க வழிவகுக்கும். அதற்கு வரி ரத்து, இதற்கு வரி குறைப்பு என்பதெல்லாம் வெறும் கண் துடைப்பு என்னுமளவில் இந்த விலைவாசி உயர்வு அவற்றை விழுங்கி ஏப்பம் விட்டு விடும்!

தொழில் வளர்ச்சிக்கு இருந்து வந்த பல சலுகைகளை ரத்து செய்திருப்பதுடன், அதிகரிக்கப்பட்டுள்ள மின் கட்டணத்துக்கு மேல் அதற்கு ஒரு விற்பனை வரியும் விதிக்கப்பட்டுள்ளது! இவையெல்லாம் தொழில் வளர்ச்சியைப் பாதிப்பது மட்டுமல்ல; கணக்கத்தைக் கூட உருவாக்கும்.

மேக்-அப் போட்ட பிறகு சிகை அலங்காரம் கருதி டோப்பா ஒன்றையும் பொருத்தியது போல, சென்னையை அழகுபடுத்தும் திட்டத்தை அறிவித்திருக்கிறார் நிதி அமைச்சர். இது உலக வங்கியின் நிதி உதவியோடுதான் நடக்க முடியும். கடனை வட்டியுடன் தமிழக மக்கள்தான் திருப்பித் தர வேண்டும்.

பட்ஜெட் பற்றிப் பெரும் செல்வந்தர்களுக்குக் கவலையில்லை. அவர்களுக்கு செலவுக் கணக்கு எழுதவும் கறுப்புப் பணம் பண்ணவும் தெரியும். அடிமட்ட ஏழைகளுக்கும் பல இலவச சலுகைகள் கிடைப்பதால் அதிக பாதிப்பு இல்லை. நடுத்தர வர்க்கத்தினர்தான் ஒவ்வொரு பட்ஜெட்டிலும் பலத்த அடி வாங்குகிறார்கள். இப்போதும் அப்படியே.




கல்கி



1991
செப்டம்பர் 15
மலர் : 50
இதழ் : 7
பிரஜோத்பத்தி
ஆவணி 30


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

# சாணக்கியத்தின் மறுபெயர்

# வி.பி.சிங்!

## இனிய மயக்கம்

அமிருத்ஸரிலிருந்து எழுபது கி.மீ. தூரத்திலிருக்கும் குர்தாஸ்பூரின் போலீஸ் சூப்பிரண்டெண்ட் பாவாவிற்காக ஒரு பெட்டி இனிப்புக்களை யாரோ கொண்டு வந்தனர். எஸ்.பி. வெளியே போயிருந்தார். இரண்டு கட்டி பர்ஃபியை எடுத்துக் கொண்டால் தெரியவா போகிறதென்று எடுத்து, அங்கிருந்த கான்ஸ்டபிளுக்கும் ஒன்று கொடுத்தார் உதவியாளர். மீதி பாவாவின் வீட்டிற்குப் போனது.

இருவரும் இனிப்பைத் தின்றதுதான் மிச்சம், மயங்கிவிழுந்தனர். ஓடு, தூக்கிக் கொண்டு ஆஸ்பத்திரிக்கு!

அங்கே பர்ஃபியில் விஷங்கலந்திருக்கிறதென்று கண்டு பிடித்தனர். உடனே எஸ்.பி.யின் வீட்டுக்குப் போன் பறந்தது. ஒரு குடும்பம் பிழைத்தது.

இது பஞ்சாப் பயங்கரவாதிகளின் வேலையாய் இருக்கும் என ஊகம். இனிப்பில் விஷமருந்து கலப்பது போன்ற முறைகள் இதுதான் முதல் தடவையாம். சாதாரணமாக அவர்கள் ஏ.கே. 47 - இல் தானே பேசுவார்கள்!

## ஒரு கல்லில் இரண்டு காயம்!

மிக அதிக முறை பதவி துறந்ததற்கும், அதைவிட அதிகத் தடவை துறக்கப் போவதாய்ப் பயமுறுத்தியதற்கும் சாதனை ஏற்படுத்திய ராஜா சாஹப் விரைவில் கின்னஸ் சாதனையில் இடம் பெறுவார் என்பது கவனிப்போர் கணிப்பு. அஜீத்சிங் முகத்தில் மட்டுமல்ல; ''ராஜிநாமா செய்வாரா?'' என்று கொக்கரித்த இமயவரம்பன் போன்றோர் முகங்களிலும் கரி.

பதவிக்கும் வருட வருமானத்திற்கும் கில்லாடித்தனமாக முடிச்சுப் போட்டுப் பலரையும் திணறடித்துவிட்டார். அவரே நிர்ணயித்த 'அமீரி ரேகா' என்னும் செல்வக் கோட்டை எட்டுமளவுக்கு வருட வருமானம் இருப்பதால், தாம் பதவி துறக்கிறாராம். ஒரே கல்லில் இரண்டு காயம். அஜீத்சிங்கும் ஒன்றும் ஏழையில்லையே; முணுமுணுத்துக் கொண்டு வெறுமனே இருக்கிறார்.

சாணக்கியத்தின் மறுபெயர் வி.பி.சிங்!

## எங்கே சோனியா?

'அரசியலில் புகுவார்', 'மாட்டார்', 'பிரதமராவார்' என்று எல்லோரும் மண்டையை உடைத்துக் கொண்டிருக்க, குழந்தைகளை அழைத்துக்கொண்டு கம்பி நீட்டிவிட்டார் சோனியா அமெரிக்காவைப் பார்த்து.

நரசிம்மராவுக்குக் குழிபறிக்கச் சமயம் பார்த்துக் கொண்டிருக்கும் சோனியா தாசர்களுக்கு இதில் அதிர்ச்சி. அவர் இந்தியா திரும்பி வரும் நாளை ஆவலோடு எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அதுவரை கவலை குறைய பிரதமர் நிம்மதியாக ஃபைல் பார்க்கலாம்.

## ருஷியப் புரட்சி

**மா**காளி பராசக்தி கடைக்கண் வைத்ததால் 'ஆஹா!' வென்று எழுந்ததாக மகாகவி நம்பிய ருஷியப் புரட்சியைக் காலவெள்ளம் அடித்துச் சென்று கொண்டிருக்கிறது.

ஜார்மன்னன், அவனது மனைவி, இரண்டு குழந்தைகள், நான்கு அந்தரங்க வேலையாட்கள், ஒரு நாய் - இவர்களைப் புரட்சியாளர் தனியே கொண்டுபோய் நெற்றிப்பொட்டில் துப்பாக்கியை வைத்துச் சுட்டுத் தீர்த்தனர். ஜார்மன்னனின் இடத்தை அவனுக்கு எந்த அளவிலும் திமிரிலோ, ரத்தவெறியிலோ குறைவில்லாத கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் பிடித்துக் கொண்டனர்.

ஒரு பக்கம் சந்திர மண்டல ஆராய்ச்சியும் அணு ஆயுதங்களும் செழிக்க, மறு பக்கம் உணவுக்காக மக்களின் நெடும் வரிசைகள். வயிற்றுக்குச் சோறில்லையென்றால் எந்த 'இஸ'மும் தழைக்க முடியாதென்பதைப் புரிந்து கொண்டார் கார்பச்சோவ். அதைவிட முக்கியமானதான சுதந்திரத்தை மக்களுக்கு வழங்கினார். என்றாலும் பாதிக்குமேல் பிரிந்து நின்று சுதந்திரப் பிரகடனம் செய்து கொண்டிருக்கும் சோவியத் குடியரசுகளை எப்படி ஒற்றுமைப் படுத்தப் போகிறார் என்பதில்தான் அவரது திறமை வெளிப்படப்போகிறது. ஏனெனில், சுதந்திரம் இருந்தாலும், ஒரு அமைப்பிற்குள் அடங்காவிட்டால் ருஷ்யப் பொருளாதாரமும், பாதுகாப்பும் சிதறிப்போகும்.




## மழை, அடைமழை!

**தி**ல்லிக்கு வந்த புதிதில் மழை என்ற நாமதேயமே இல்லாதிருப்பதைப் பார்த்து விட்டுக் குழந்தைகளைக் கல்விச் சுற்றுலாவாகக் கேரளம் அழைத்துச் சென்று வானத்தைப் பிளந்து கொண்டு கொட்டுவதைக் காண்பிக்கலாமா என்று தோன்றியதுண்டு.

அப்பேர்ப்பட்ட தில்லியில் ஒரு வாரமாய் மழை. இரண்டு மூன்று நாட்கள் ராப்பகலாய்க் கண்மூடாது கொட்டியது வானம். சாலையில் கணுக்காலளவு தண்ணீரில் நடக்கும் போது எத்தனை வாகனங்களில் எரிபொருளும், எண்ணெய்யும் ஒழுகுகிறதென ஏழு நிறமாய்க் காட்டியது ஓடுநீர்.

பசுமையான நகரம்தான் என்பதை வியப்பும் நகைப்புமாய் இருந்த மரங்களும் புல்வெளிகளும் மீண்டும் நிரூபித்தன.

நல்ல மழை நாளில் அவ்வப்போது சூடான தேனீர் குடித்தபடி அப்புசாமி, சீதாப்பாட்டி கதைகளைப் படிப்பதே சொர்க்கம் என்பது இ.வ.வின் எண்ணம். கருத்து மாறுபாடிருப்பவர்கள் எழுதவும். சிறந்த ஐடியாவுக்குப் பரிசு : ஒரு வாரம் சிரபுஞ்சியில், உங்கள் செலவில்.

- இமய வரம்பன்.

''பிளேடு பக்கிரிக்கு உடம்பு சரியில்லே... சாராயம் சாமிக்கண்ணு வெளியூர் போயிருக்கான்... பிக்பாக்கெட் பொன்னுசாமி வீட்ல பிரசவம்...''

''சரி சரி. இன்னிக்கு மாமூல் எதுவும் கிடையாது. வெறுங் கையோடதான் வீட்டுக்குப் போகணும்னு சொல்லு!''

- ஆலத்தம்பாடி ராஜகோபால்.



# சொட்டுது தண்ணீர்; கொட்டுது லாபம்!

**வை**யம்பட்டி ராமசாமியின் நிலத்திற்குப் பக்கத்தில் கண்ணூற்று ஆறு. அதிகமாக இல்லாவிட்டாலும், வருடத்தில் குறைந்தது எட்டு மாதம் ஓரளவு தண்ணீர் ஓடிக் கொண்டேயிருக்கும். அதனால் ராமசாமியின் நிலத்தில் உள்ள கிணற்றில் தண்ணீர் மட்டம் குறையவே செய்யாது. 1977 ஆம் வருடம், ஆற்றுக்கு மேலே அணை கட்டப்போகிறார்கள் என்ற செய்தி ராமசாமியின் காதுகளுக்கு எட்டியது. ஓர் அணை கட்டினால் எப்போதுமே, அதுவரை ஆற்றினால் பயன் பட்டு வந்த பாசனங்கள் பாதிக்கப்படுவதும், அணைக்கு அருகில் புதிய பாசனப் பகுதிகள் ஏற்படுவதும் சகஜம். தண்ணீர் சேமிக்கப்படுவதால் ஆற்றில் நீர் வரத்து இருக்காது. இதனால், ஆற்றுக்கு அருகில் இருக்கும் கிணறுகளில் நீர்மட்டம் குறையலாம். இவற்றையெல்லாம் யோசித்துப் பார்த்தார் ராமசாமி. பிறகு என்ன செய்தார்? அவரே சொல்கிறார்.



✦ வையம்பட்டி இராமசாமி

''மழை வேறு அவ்வப்போது பொய்த்து வருவதால், நமது நிலநீர் மட்டம் குறைந்து கொண்டே போகிறது. ஆகவே கிடைக்கும் தண்ணீரைச் சிக்கனமாகப் பயன்படுத்த வேண்டிய பொறுப்பு நமக்கு இருக்கிறது. யோசித்த போது, சில இஸ்ரேல் பத்திரிகைகளைப் பார்க்க நேர்ந்தது. இஸ்ரேல் நாட்டில், தண்ணீர் மிக அரிதான பொருள். ஆயினும் கிடைக்கும் நில நீரைப் பயிர்களுக்குச் சிக்கனமான முறையில், பாய்ச்சி, விளைச்சலைப் பெருக்கிக் கொண்டிருந்தார்கள். எப்படி? பயிர்களுக்குத் தண்ணீரைக் கொட்டுவதற்குப் பதில் 'சொட்டினார்கள்!' ஆம்! Drip irrigation எனப்படும் சொட்டு நீர்ப் பாசன முறையின் முன்னோடிகள் அவர்கள் தான்.

''நான் அந்தச் சமயத்தில் ஒரு ஏக்கரில் அரளிச் செடி போட்டிருந்தேன். அவைகளுக்குச் சொட்டு நீர்ப் பாசனத்தைக் கையாளத் தீர்மானித்தேன். அலைந்து திரிந்து கோயம்புத்தூரில் சில சாதனங்களை வாங்கினேன். நானே டிசைன் போட்டு, பிரதான குழாய்களையும், செடிகளுக்குப் போகும் இணைப்புக் குழாய்களையும் பூமியில் பதித்தேன். கிணற்றுக்குப் பக்கத்தில், மோட்டார் அறைக்கு மேலே டேங்க் கட்டி, மெயின் குழாயை அதனுடன் இணைத்தேன். மோட்டார் மூலம் டேங்கிற்குத் தண்ணீர் ஏற்றி, பிறகு தேவைக்கேற்பச் செடிகளுக்குச் செல்லும் மெயின் குழாயைத் திறப்பேன். இணைப்புக் குழாய்கள் மூலம் தண்ணீர் அழுத்தத்தில் விரைந்து செடிகளின் வேர்ப் பகுதியை அடைந்து சொட்டும். எனது அரளிச் செடிகளுக்குச் சொட்டு நீர்ப் பாசனம் செய்ததன் மூலம், தண்ணீரைச் சிக்கனமாகப் பயன் படுத்தியது மட்டுமல்லாமல் அரளி மலர் விற்பனையில் அதிக லாபத்தையும் என்னால் பெற முடிந்தது!''

''சொட்டு நீர்ப் பாசனத்தில் வேறென்ன வசதிகள்?''

''செடியின் வேர்ப் பாகத்தில் மட்டுமே தண்ணீர் பாய்வதால், களைகளுக்குத் தண்ணீர் கிடைக்காது. அழிந்துவிடும்.''

''அரளிச் செடி தவிர வேறு எதற்குச் சொட்டு நீர்ப் பாசனம் பயன்படுத்தலாம்?''

''எலுமிச்சை, கொய்யா, போன்ற வகைகளுக்கும் சொட்டுநீர்ப் பாசனம் செய்து லாபம் கண்டிருக்கிறேன். உதாரணமாகப் பாத்தி முறையில் பாசனம் செய்தால் ஒரு மாதத்துக்கு, 80 எலுமிச்சைச் செடி களுக்கு, 7,20,000 லிட்டர் தண்ணீர் தேவை. ஆனால் சொட்டு நீர்ப் பாசனத்தைக் கையாண்டால் 60,000 லிட்டர் தண்ணீரில் சமாளித்து விடலாம்! ஒரு செடிக்குத் தினசரித் தேவை 25 லிட்டர். சொட்டு நீர்ப் பாசனத்தில் சரியான அளவைச் செடி களுக்குக் கொடுக்க முடியும். விளைச்சலும் அதிகரிக்கும். செலவு மிச்சம். தண்ணீரும் சேமிக்கப்படுகிறது.''

**சொ**ட்டு நீர்ப் பாசனத்தில் ராமசாமி செய்த சாதனையைக் காண, தமிழகத்தின் பல பாகங்களிலிருந்து விவசாயிகளும், விவசாயத்துறை அதிகாரிகளும் வையம்பட்டிக்கு வந்து செல்கிறார்கள்.

**- ப்ரியன்**

வாசகர் யோசனை :
தெ.சு. திலீபன்

# இதயம்

தொடக்கத்திலேயே சொல்லி விட வேண்டும் - படத்தைக் காப்பாற்றுகிறவர்கள் இருவர் : 1. காமிராக்காரர், 2. இசையமைப்பாளர். முன்னவர் : அப்துல் ரஹ்மான். பின்னவர்: இளையராஜா.

கதாநாயகி : ஹீரா. புதுமுகம். (பெயர்தான் அப்படி. 'சாப்டீங்களா, சாப்டீங்களா?' என்று டீ விளம்பரத்தில் வரும் தமிழ்ப் பெண்தான்.)

அதிகம் வேலையில்லை. முகத்தை மட்டும் திருப்பிப் பார்த்துக் கபடமில்லாமல் கண்களை விரிக்கிறார். வெகுளியாய்ச் சிரிக்கிறார். வசதியாக அதிகம் வசனம் இல்லை. வரவேற்க வேண்டிய அறிமுகம்.

கதாநாயகன் : முரளி. இவருக்கும் அதிகம் வேலையில்லை. காதலிக்கிறார். அந்தக் காதலை வெளியிடத் தயங்குகிறார். அவ்வப்போது கண்ணீர் விடுகிறார்.

அப்படியென்றால் யாருக்குமே வேலை இல்லையா?

ஏன் இல்லை? இருக்கவே இருக்கிறார்கள் புரொபஸர் ஜனகராஜு¬ம் மாணவர் சின்னி ஜெயந்தும். வெளுத்துக் கட்டுகிறார்கள்.

ஓரிரு காட்சிகளில் மனோரமாவும் விஜயகுமாரும். 'ஓல்ட் இஸ் கோல்ட்' என்பது உண்மைதான்.

அவ்வப்போது நாட்டியம் என்கிற பெயரில் (மருத்துவக் கல்லூரி!) மாணவர்கள் ஒரு கோஷ்டியாக இடுப்பையும் கையையும் காலையும் வளைத்து உதறி... சும்மா சொல்லக் கூடாது, நன்றாகவே உடற்பயிற்சி செய்கிறார்கள்.

அது சரி, கதை என்ன?

கதாநாயகன் காதலிக்கிறார். வெளியிடத் தயங்குகிறார்.

அப்புறம்?

காதலிக்கிறார். வெளியிடத் தயங்குகிறார்.

காதலிக்... வெளியிடத்...

காத.... வெளி...

கா.... வெ...

படத்தின் தலைப்புத்தான் கிளைமாக்ஸ¬ம். (தனியாக அதனை நியாயப்படுத்த வேண்டிய சிரமம் இல்லாமல் போனது ஓர் ஆறுதல்.)

''இந்தப் படம் ஓடினாலும் ஓடும்'' என்றார் பக்கத்திலமர்ந்து படம் பார்த்த பாலகுமாரன்.

சொல்ல முடியாது. எழுத்தாளர் வாக்கு... பலித்தாலும் பலித்து விடும்!

- சி. ஆர். கே.



# நேற்றுவரை நந்தவனம்

23

நிர்மலா, வைத்த கண்ணை எடுக்காமல் ரவியையே பார்த்தாள்.

''என்னங்க, நீங்க என்ன சொல்றீங்கன்னு உங்களுக்கே புரிஞ்சுதான் சொல்றீங்களா?''

''நல்லா யோசிச்சுத்தான் சொல்றேன் நிம்மி. எப்படியும் குமரன், அந்தப் பெண்ணைக் கல்யாணம் செஞ்சுக்கக் கூடாது. பேப்பர்லே எல்லாம் அவன் பேரு சந்தி சிரிக்கணும். எங்கப்பா என்னவோ, மாப்பிள்ளை ரொம்ப உத்தமன்னு நினைச்சிட்டிருக்காரு... அவர் மூஞ்சியில கரிய வாரிப் பூசற மாதிரி - நியூஸ் பேப்பரைக் கொண்டு போய், நான் அவரெதிருல கடாசணும்....''

''அதுக்காக என்னைப் போய்.....''

ரவி, நிர்மலாவின் கரத்தைப் பிடித்து, முத்தமிட்டான். அந்தக் கணத்தில், அவள் காலைப் பிடிக்கவும் அவன் தயாராக இருந்தான்.

''உன்னை விட்டா, வேற யாராலேயும் இதைச் செய்ய முடியாது நிம்மி. என் தங்கமில்லே? யோசிச்சுப் பாரு... கிரானைட் தொழிலுக்கு இன்னும் பணம் தேவைப்படுது. இது வரைக்கும், வருஷம் அஞ்சாகியும் ஒத்தைப் பைசாக் கூட லாபமில்லாததாலே, எங்கப்பா இனிமே என் கிட்டக் காசு கேட்காதேயின்னு சொல்லிட்டார். பெருவாரியான சொத்து தெய்வாமேலயும், இளவரசு மேலயும்... கிழவனைக் கொன்னுடலாம்னு கூட சில சமயம் ஆத்திரம் வருது...''

நிர்மலா, விழிகளில் பெருகும் நீரை விரலால் சுண்டியபடி ஆத்திரத்துடன் சொன்னாள்.

''முதல்லே அதைச் செய்யுங்க....''

ரவி, அதிர்ந்து போய், ''என்னது?'' என்றான்.

''நிஜத்தைத்தான் நானும் சொல்றேன். என்னை இப்படி மானக்கேடான விஷயத்தைச் செய்யச் சொல்றதை விட, உங்களை நம்பாத உங்க அப்பாவைக் கொன்னுட்டு, நீங்க ஜெயிலுக்குப் போகலாம்....''

''ஏய், விளையாடறியா?

ரவியின் கேள்வி, நிர்மலாவை மேலும் விசும்பச் செய்ய, அவள் வாய் விட்டு அழுதாள்.

''பணத்துக்காக இன்னது செய்யறதுதான்னு ஒரு கேள்வி முறை இல்லையா? அப்ப என்னடான்னா, தர்மராஜனை நடுத்தெருவுல நிறுத்தணும்னு, உங்களுக்குப் பொறந்த பிள்ளைய, அவருக்குப் பொறந்ததாப் பொய் சொல்லச் சொன்னீங்க..... இந்த விஷயம் ஒரு பத்திரிகை விடாம நாறி, என்னைப் பகல் நேரத்துல வெளியில தலை காட்டவே விடாம செஞ்சிடுத்து... குழந்தைக்கு உடம்பு சரியில்லையின்னு ஆஸ்பத்திரிக்குத் தூக்கிட்டுப் போனா - 'அதோ போறா பார்டா, அவதான் தர்மராஜனோட கீப்... ரெண்டு மாசம் முந்தி பத்திரிகைகள்லே பத்தி பத்தியா வந்திருந்ததே... அது. இவதான்'னு என் காது படப் பேசறாங்க... நாண்டுக்கிட்டுச் சாகலாம் போல இருக்கு...''

''அதையெல்லாம் காதுலேயே போட்டுக்காதேயின்னு நான் எத்தனை தடவை சொல்லியிருக்கேன் நிம்மி... யார், என்ன சொன்னாலும், ஒரு நாள் உன்னை, வைரத்தில மாலையிடப் போறவன் நான்தான். நானே, இதைப் பத்தியெல்லாம் கவலைப்படாதப்ப, உனக்கென்னங்கறேன்...''

அந்த ஒரு கணத்தில் நிர்மலாவிற்கு வாழ்க்கை மீதிருந்த நம்பிக்கையே விட்டுப் போயிற்று.

எத்தனை அன்பாக இருந்தவன்?

'உன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தால் போதும் நிம்மி.... எனக்குச் சோறு தண்ணீர் வேண்டாம்' என்று வசனம் பேசியவன் -

இன்றைக்கு வந்து, திடீரெனப் புதுசாய் ஒரு குண்டைப் போடுகிறானே....

இவள் போய், போலீஸ் ஸ்டேஷனில் கதறிக் கொண்டு புகார் கொடுக்க வேண்டுமாம்...

யார் மீது?

குமரன் மீது....

என்னவென்று....

''அய்யா, மகராஜன் தர்மராஜன் இருந்த வரைக்கும் ஏதோ எனக்கும், அவர் மூலமா

அனுராதா ரமணன்

எனக்குப் பொறந்த குழந்தைக்கும் படி யளந்திட்டிருந்தார். இப்ப, சாப்பாட்டுக்கே திண்டாட்டம். நான், இந்தக் கஷ்டம் தாங் காம தர்மராஜன் சம்சாரத்துக்கும், அவங்க பிள்ளை குமரனுக்கும் தினமும் போன் செஞ்சிட்டேயிருக்கேன். இது நாள் வரைக்கும் எதுவும் செய்யலை... இப்பத் தான் சித்த முந்தி குமரன் வந்தார். நான், அவர் காலைப் பிடிச்சிட்டு அழுதேன்; குழந்தைக்காவது ஏதாவது வழி செய்யுங் கன்னு சொன்னேன். அவர், முதல்லே உதவி செய்யறதாச் சொன்னாரு. அடுத்த நிமி ஷமே, எதிர்பாராத விதமா, என் கிட்ட முறைதவறி நடந்துக்க முயற்சி செய்தாரு. நான் அழுதேன். கதறினேன். அவர் இஷ்டத்துக்கு நான் சம்மதிக்கலையின்னு, என்னையும், அவரோட அப்பா, பெண்டாட்டிய அனுப்பி வச்ச மாதிரியே, பரலோகத்துக்கு அனுப்பிடுவேன்னு மிரட் டினார்.... என்னைக் காப்பாத்த யாரு மில்லே. நான் நாதியத்த பாவியாப் போயிட் டேனே... இந்த உலகத்தை இனிமே நான் எப்படித் தலை நிமிர்ந்து பார்ப்பேன்....''

நிர்மலா, இரு செவிகளையும் இறுகப் பொத்தியபடி, ஆவேசமாய் 'முடியாது' என்கிற பாவனையில் தலையசைத்தாள்.

ரவியோ, ஏற்கெனவே சகாதேவன் முடுக்கி விட்ட வேகத்துடன், இவளது பிடி வாதத்தினால் எழுந்த ஆத்திரமும் சேர்ந்து கொள்ள, பற்களைக் கடித்தான்.



''முடியாதுன்னா என்ன அர்த்தம்?''

''நான் மறுபடியும் சேற்றை வாரிப் பூசிக்க முடியாதுன்னு அர்த்தம். ஏங்க, உங்க ளுக்கு யார் இந்த யோசனையைச் சொன் னாங்களோ தெரியாது. உங்களுக்கு என் கிட்ட இது பத்திப் பேச எப்படி மனசு வந்தது?''

''இவ, பெரிய பதிவிரதை. நான் கேட் டதுதான் தப்பாப் போச்சு?''

வார்த்தைகள், வாயை விட்டுக் குதித்து



''இந்த போலீஸ்காரர் என்னைத் துரத்திப் பிடிச்சதாச் சொன்னது அப்பட்டமான பொய் எசமான்.''

நீதிபதி : எப்படிச் சொல்றே?''

''வேணும்னா நான் ஓடறேன்; அவரால என்னைத் துரத்திப் பிடிக்க முடியுதான்னு பாருங்க!''

– சீர்காழி வி. ரேவதி.



''நேற்று ராத்திரி உங்ககிட்டே வந்து ட்ரீட்மெண்ட் எடுத்துக்கறதாக் கனவு கண்டேன்.''

''கன்ஸல்ட்டிங் பீஸ் கொடுத்துட்டுப் போனீங்களா?''

– திருத்துறைப்பூண்டி எஸ். கந்தசாமி.



காதலி : ''எனக்குக் கல்யாணம் நடக்கப் போகிற விஷயம் உங்களுக்கு முன்னாடியே தெரியுமா... எப்படி?''

காதலன் : ''பெரிய கண்டத்திலேயிருந்து நான் தப்பிச்சிடுவேன்னு ஜோசியர் சொன்னாரே...''

– செங்குன்றம் ரமேஷ்ராம்.

விட்ட மறு கணமே, அவன் தன் தவறை உணர்ந்தான்.

ஆனாலும், என்னவோ ஓர் அசட்டுப் பிடிவாதம், தனக்காக இவள் இது கூட செய்யக் கூடாதா என்கிற வேகம்... அவனை அழுத்தமாய் அமர வைக்க -

அவன் சீறி வெடித்தான்.

''இந்தப் பாரு, நான் பதிவிரதையா இல்லையான்னு உன் கிட்ட நிரூபிக்க ணும்னு அவசியமில்லே. எழுந்து போ வெளியே....''

''வாட்?''

''வெளில போடா நாயேங்கறேன். போயும், போயும் உனக்காக - உன் குழந்தைய வயித்துல சுமந்து, நான் நடத்தை கெட்டவங்கிற பட்டம் வாங்கிக் கட்டிட்டேன் இல்லே? அதுக்கே - ஏழேழு பிறவி எடுத்தாலும் பாவம் தீராது. உன் கூட நான் இன்னமும் பேசிட்டிருக்கறதே அவமானம்.''

அவள், குழந்தையை மார்புடன் அணைத்தபடி உள்ளே சென்று விட்டாள்.

இவன் செய்வதறியாமல் திகைத்து நின்றான்.

சகாதேவன் சொன்னதென்ன.... இங்கே நடந்ததென்ன...

நம் யோசனைக்கு நிர்மலா மசியா விட்டால் - அவளைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாது என்று மறுத்து விட வேண்டும்.

பிறகு அவள் கெஞ்சுவாள்; அழுவாள்; காலைப் பிடித்துக் கொண்டு மன்றாடுவாள். கடைசியில் தன் இஷ்டத்திற்குச் சம்மதிப்பாள்.

இதுதானே அவன் எண்ணம்... இப்படி எல்லாமே தலை கீழாக மாறி விட்டதே....

இதே சமயத்தில், ராஜேஸ்வரி - மீராவையும் இளவரசுவையும் அழைத்துக் கொண்டு நகைக் கடைக்குச் சென்றாள்.

குமரன்தான் காரை ஓட்டினான்.

வெகு நாட்களுக்குப் பிறகு, அவன் வண்டியை வெளியில் எடுத்திருக்கிறான்.

தர்மராஜன் இருந்த போது, அனேகமாய்க் குமரன்தான் அவருக்குச் சாரதி. அவனில்லா விட்டால்தான் டிரைவர்.

சில சமயங்களில், மகளுக்குத் தெரியாத இடங்களுக்குப் போக வேண்டியிருந்தால் மாத்திரம் டிரைவர்.

குமரன், தன் வரையில் மோட்டார் சைக்கிளே போதுமென்பவன்.

ராஜேஸ்வரி எப்போதுமே ஞானத்தின் ஆட்டோவில்தான். அவளுக்கு அதுதான் சரிப்பட்டு வரும்.

இன்றைக்குத்தான் வெகு நாட்களுக்குப் பிறகு - குடும்பமே காரில்.

ராஜேஸ்வரியின் உப்பிய கன்னங்களில் சிறு குழந்தை போல சந்தோஷம்....

நர்ஸ் டிரெயினிங் முடித்தவுடன் எனக்கு ஒரு நர்ஸிங் ஹோமில் வேலை கிடைத்தது.

பேஷண்டுகளை கவனிப்பது தவிர இங்கு என்கொயரி அட்டண்ட் பண்ணுவது, டெலிஃபோன் அட்டண்ட் பண்ணுவது போன்ற வேலைகளையும் நான் கவனிக்க வேண்டியிருந்தது.

நேரிலும், தொலைபேசியிலும் விசாரிப்பவர்கள் பெரும்பாலும் ஆங்கிலத்தில்தான் பேசுவார்கள்.



**"How is the patient now?"**
**"Did he sleep well last night?"**

என்று, பேஷண்டுகளின் உடல்நலம் பற்றி அவர்களது உறவினர்கள் என்னிடம் கவலையுடன் விசாரிக்கும் போது, அவர்களுக்கு ஆறுதலாக நாலு வார்த்தைகள் ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்று எனக்கு மிகவும் வேதனையாக இருக்கும்.

எப்பாடுபட்டாவது இந்த இங்கிலீஷைக் கற்றுக் கொண்டு மற்றவர்களைப் போல சரளமாகப் பேச வேண்டும் என்ற ஆர்வத்தில் பல புத்தகங்களை வாங்கிப் படித்தேன். ஆனால் பயனேதும் ஏற்படவில்லை.

இத்தருணத்தில் விவேகானந்தா கல்வி நிலையம் பற்றி கேள்விப்பட்டு, இக்கல்வி நிலையம் நடத்தும் தபால் முறை ஆங்கிலப் பயிற்சியில் சேர்ந்தேன் அடிப்படையிலிருந்து ஆங்கில இலக்கணத்தைப் புரியும் வகையில் சொல்லிக் கொடுத்து, நாம் அன்றாட வாழ்க்கையில் சந்திக்கும் ஒவ்வொரு சூழ்நிலையிலும் எப்படிப் பேச வேண்டும் என்பதை பல எளிய உதாரணங்கள் மூலம் தெளிவாக விளக்கி, தயக்கமின்றி சரளமாகப் பேச பக்கத்திற்குப் பக்கம் பயிற்சி முறைகளைத் தொகுத்து வழங்கியிருக்கிறார்கள்.

## எப்படி மறக்க முடியும்?

இப்பயிற்சியை முடித்த என்னால் இப்பொழுது சரளமாக ஆங்கிலத்தில் பேச முடிகிறது.

தொடர்ந்து நான்கு வார்த்தைகள் கூடப் பேசத் தயங்கிக் கொண்டிருந்த எனக்கு மிகச் சரளமாக ஆங்கிலத்தில் பேசப் பயிற்சியளித்த விவேகானந்தா கல்வி நிலையத்தை என்னால் எப்படி மறக்க முடியும்?

**நீங்களும் வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் ஆங்கிலப் பயிற்சி பெறலாம்.**

நேர்முகப் பயிற்சியும் உண்டு.

நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி.

---

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**தபால் பெட்டி எண் 4986**
**9, நடேசன் தெரு, தி.நகர்,**
**சென்னை — 600 017.**

NAGA

''மீரா, உனக்கு இஷ்டப்பட்ட புடைவைங்களை எடுத்துக்க. கூச்சமே வேண்டாம். ஆனா ஒரு கண்டிஷன்.. கூறைச் சேலை மாத்திரம் நான்தான் எடுப்பேன்.''

''பட்டுப் புடைவையின்னா - அம்மாவுக்குத் தகடு மாதிரி கனமா இருக்கணும்...''

குமரன் ஒரு கையால் ஸ்டீயரிங்கைப் பிடித்தபடி, ஓரக் கண்ணால் மீராவைப் பார்த்துச் சிரித்தான்.

''அவன் அப்படித்தான் சொல்லுவான் மீரா. பட்டுப் புடைவையின்னா - கொடுக்கற காசுக்கு ஒரு நாலு விரற்கடை அளவாவது ஜரிகை போட்டிருக்கணுமா வேண்டாமா. இவன் ஒரு தடவை, பம்பாய்க்குப் போயிட்டு வந்தப்ப - சூரத் பட்டுன்னு ஒண்ணை வாங்கிட்டு வந்தான் பாரு. உடம்பு முழுக்கப் பித்தளை ஜரிகையும், பாசி மணியும் வச்சுத் தச்சு....விலை என்ன தெரியுமோ, நாலாயிரத்துச் சொச்சம்...அப்படியே வச்சிருக்கேன்...''

ராஜேஸ்வரி, நொடிக் கொரு தரம், தன் பக்கத்தில் அமர்ந்திருக்கும் மீராவைத் திரும்பிப் பார்த்தாள். முகத்தில் பெருமிதம் சுடர் விட்டது.

தெய்வநாயகியை, குமரனுக்கு மணம் பேசி முடித்த போது கூட, ராஜேஸ்வரி மகிழ்ச்சியோடு கல்யாணக் காரியங்களில் ஈடுபட்டவள்தான். ஆனாலும், உள்ளூர ஒரு குறை இருந்தது; பயம் இருந்தது.

கூறைச் சேலை வாங்க, தெய்வாவை அழைத்துக் கொண்டு கடைத்தெருவுக்குப் போக ராஜேஸ்வரி மிகவும் ஆசைப் பட்டாள்.

ஆனால் தெய்வாதான் வரவில்லை.

'எனக்குப் பட்டுப்புடைவையின்னாலே பிடிக்காது. என் தொழிலுக்கு, அதெல்லாம் சரிபட்டும் வராது. ஏதோ ஒண்ணை நீங்களே பார்த்து எடுங்க.'

அவள், தன் தாயிடம் சொல்லி அனுப்பிவிட்டாள்.

ராஜேஸ்வரி எந்தப் புடைவையைத் தேர்ந்தெடுத்தாலும், தெய்வாவின் தாய் ஆயிரம் குறை கூறினாள்.

'அய்யே... இத்தனை ஜரிகை போட்டு யார் கட்டுவாங்க...'

'கலர் அடிக்க வர்றாப்பில இல்லே? ஆஸ்பத்திரிக்கு என் மக, பூப் போட்ட வெள்ளைப்புடைவையத்தான் கட்டுவா....'

'ஆனாலும் கனமுங்க. என் மக, ஒரு செயின் போட்டாலே உறுத்துது, உறுத்துதுன்னு புலம்புவா...'

ராஜேஸ்வரி, பல்லைக் கடித்துக் கொண்டு கடைசியில் அந்த அம்மாளின் விருப்பப்படியே இரண்டு புடைவைகளை எடுத்தாள்.

தெய்வாவிடம் காட்டிய போது, அந்த முகத்தில் கடுகளவு மலர்ச்சி கூட இல்லை.

கல்யாணக் கூறைச் சேலையைப் பார்க்கும் ஒரு பெண்ணின் முகம் எத்தனை விதமான உணர்ச்சிகளைக் கொட்டும்?

இவளோ, சலவைக்குப் போய் வந்த துணிகளைப் பார்ப்பது போல, நுனி விரலால் சற்றுப் புரட்டிப் பார்த்து விட்டு எழுந்து விட்டாள்.

அது மட்டுமில்லை. கல்யாணம் முடியும் வரையில் ராஜேஸ்வரியின் ஒவ்வொரு விருப்பத்துக்கும், அவள் தன் கணவனிடமோ, சம்பந்தி அம்மாளிடமோ சிபாரிசு தேடிப் போக வேண்டியிருந்தது.

'ஏங்க, நம்ம குடும்ப வழக்கப்படி ஊஞ்சல், நலங்கு எல்லாம் உண்டா.... அந்தப் பொண்ணு இதுக்கெல்லாம் சம்மதிக்குமா....'

'ஏய், பட்டிக்காடு மாதிரி, அங்கே போய் இப்படி எதுவும் பேசி வைக்காதே. அது படிச்ச பொண்ணு. கண்டபடி இங்கிலீஸ்லே திட்டிடப் போகுது....'

'தாலி கட்டின உடனே சாமிமலைக்கு, மாலையும் கழுத்துமா....'

'நீங்க வேற... இன்னும் அந்தக் காலத்துலேயே இருக்கீங்களே சம்பந்தியம்மா? என் பொண்ணுக்கு, ஒரு விரற்கடைப் பூவைத் தலையில வச்சிட்டு, வெளியில வரவே பிடிக்காது... நீங்க என்னடான்னா, மாலையும் கழுத்துமா சுவாமி மலைக்குக் கூப்பிட நீங்க. அவ காதுல விழுந்திச்சின்னா - கல்யாணத்தையே நிப்பாட்டுன்னு கூச்சல் போடுவா.....'

ராஜேஸ்வரி, தனது விருப்பங்களை எல்லாம் மனசுக்குள் இறுக மூடி வைத்திருந்தாள்.

இப்பொழுது மீராவின் மூலமாகத்தான் ஒவ்வொன்றாய் நிறைவேற்றிக் கொள்ள வேண்டும்.

பாவம் ராஜேஸ்வரி.

இரவு வீடு திரும்புகையில் தனது ஆசைகளை எல்லாம் சின்னா பின்னப் படுத்தக் கூடிய கடிதம் ஒன்று காத்திருக்கப் போவதை அப்போது அவள் உணரவில்லை....

(தொடரும்)



''வார்த்தைக்கு வார்த்தை 'செய்யும் தொழிலே தெய்வம்'னு சொல்றாரே, யார் அது?''

''தெரியாதா...? அவர்தான் 'சிலைத் திருட்டு சிங்காரம்'!''

- சீர்காழி. வி. ரேவதி.




**பரிசு ரூ. 40,000**

# கல்கி பொன்விழா நாவல் போட்டி

எழுத்தாளர்களின் ஏகோபித்த வேண்டுகோளுக்கு இணங்க, கல்கி பொன் விழா நாவல் போட்டியின் முடிவு தேதி, அக்டோபர் 31, 1991 வரை நீட்டிக்கப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| சரித்திர நாவலுக்குப் பரிசு (சுமார் 52 இதழ்கள்) | ரூ. 20,000/- |
| சமூக நாவலுக்குப் பரிசு (சுமார் 26 இதழ்கள்) | ரூ. 10,000/- |
| மர்ம நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/- |
| விஞ்ஞான நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/- |

முடிவு தேதி : அக்டோபர் 31, 1991

- இதற்கடுத்த ஒன்பது மாதங்களில் நாவல்களின் பரிசீலனை முடிந்து, கல்கி பொன் விழாச் சிறப்பிதழில் முடிவு வெளியாகும். பரிசு பெற்ற நாவல்களுள் ஒன்று அதே சிறப்பிதழில் ஆரம்பமாகும். அதாவது 1992 ஆகஸ்டு முதல் வார இதழ்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படும் இதர நாவல்களுக்கு வழக்கமான சன்மானம் அளிக்கப்படும்.
- நடுவர் குழு நாவல்களைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய நாவல்களைத் தேர்ந்தெடுக்கும்.
- கல்கி பொன் விழா நாவல் போட்டிக்கு அனுப்பப்படுவதாகத் தெளிவாகக் குறிப்பிடுதல் அவசியம்.
- ஒவ்வொரு வாரமும் படத்துடன் சேர்த்துக் கல்கியில் 4 - 5 பக்கங்களுக்கு மேற்படாதபடி அத்தியாயங்களின் அளவை நிர்ணயிப்பது நல்லது.
- கடிதப் போக்குவரத்து கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத நாவல்களைத் திரும்பப் பெற போதிய அளவு தபால் தலைகள் இணைக்க வேண்டும்.
- அப்படித் திருப்பி அனுப்பவே அவசியம் நேராதபடி அற்புதமான நாவல்களை எழுதி அனுப்பிக் கல்கி பொன் விழா ஆண்டினைச் சிறப்பிக்குமாறு எழுத்தாளர் பெருமக்களை வேண்டுகிறோம்.

- ஆசிரியர், கல்கி, சென்னை - 600 032.

# இரண்டாவது முகம்

கதவைத் தட்டினான் சிதம்பரம்.

ஆசிரியரின் மனைவிதான் கதவைத் திறந்தாள்.

சிதம்பரத்தைக் கேள்விக்குறியோடு நோக்கினாள்.

''வாத்தியார் ஐயாவைப் பார்க்கணும்'' என்றதும் கதவை அகலத் திறந்தாள்.

''இப்படி உட்காருங்க. அவர் குளிச்சிட்டிருக்காரு'' என்று வெராந்தாவிலிருந்த கூடை நாற்காலியைக் காட்டி விட்டு உள்ளே சென்று விட்டாள்.

சிதம்பரம் சுற்றுமுற்றும் பார்த்தான்.

'வாய்மையே வெல்லும்' என்றபடி காந்திஜி சிரித்துக் கொண்டிருந்தார் சுவரில்.

எளிமையாக இருந்தாலும் பளிச்சென்று இருந்தது வீடு.

இருக்கும் இடம், சூழலைப் பொறுத்து மனிதரின் குணநலன் மாறும் என்பது உண்மைதான் என்று சொல்லிக் கொண்டான்.

ஆசிரியர் தசரதன் என்றாலே ஒரு மதிப்பு, மரியாதை ஊருக்குள் உண்டு. எவ்வளவுக்கு எவ்வளவு மாணவர்களின் படிப்பில் கண்டிப்பாக நடந்து கொள்வாரோ அத்தனைக்கு அத்தனை பரிவாகவும் இருக்கும் அவர் பேச்சு.



அதிர்ந்து பேச மாட்டார். ஆனாலும் அவர் குரலில் ஓர் ஆகர்ஷணசக்தி இருக்கும்.

நெற்றியில் பட்டையான விபூதியும், வெள்ளைவெளேர்கதராடையுமாக உள்ளேயிருந்து வந்த ஆசிரியரைக் கண்டு எழுந்து நின்றான் சிதம்பரம்.

''உட்காருப்பா சிதம்பரம். எப்படியிருக்கே? காப்பி சாப்பிடறியா?''

''பரவாயில்லை சார்.''

''ம், சொல்லு. என்ன விஷயம்?''

''அண்ணன் அனுப்பிச்சாரு.''

''அட, துபாயிலேயிருந்து ரங்கன் வந்திருக்கானா? எப்ப வந்தான்?''

''என் அண்ணன் வரலே ஐயா. நம்ம அண்ணன் அனுப்பிச்சாரு.''

''என்னப்பா, 'அண்ணன்' உறவைப் பொதுவுடமையாக்கிட்டே'' என்றார் குறுநகையுடன்.

''கிண்டல் பண்ணாதீங்க ஐயா. நம்ம எம். எல். ஏ. அண்ணன்தான் அனுப்பிச்சாரு.''

''ஓகோ! அவர் பையன் விஷயமாத்தானே...''

''ஆமாங்க. நீங்கதான் குறுக்கே நிற்கறீங்களாம். நம்ம கணக்கு வாத்தியார் சொன்னாரு. வகுப்பு ஆசிரியரான உங்களை மீறி அண்ணன் பையனை பாஸ் போட முடியலியாம்.''

''என் குணம்தான் உனக்குத் தெரியுமே சிதம்பரம்!'' என்றார் குரலில் நிமிர்க் கடுமையுடன்.

''ஊருக்கே தெரியுமே ஐயா. இருந்தாலும் இந்த விஷயத்துல நீங்க கொஞ்சம் வளைஞ்சு கொடுத்தீங்கன்னா உங்களுக்கும் நல்லது. அண்ணன் பையனுக்கும் நல்லது.''

''சிதம்பரம், எதுக்காகவும், யாருக்காகவும் என் குணத்தை மாத்திக்க முடியாது. நான் இப்படிச் செய்யறது எம். எல். ஏ.

கிருஷ்ணா



பையனோட நல்லதுக்குத்தான்னு யோசிச்சுப் பார்த்தால் புரியும். இந்த ஒரு வருஷம் நான் வேணும்னா அவனுக்குத் தினசரி மாலை வேளையில டியூஷன் எடுக்கறேன். அடுத்த வருஷம் நல்ல மதிப்பெண்களோட பாஸ் பண்ணட்டுமே!''

''உங்க பிடிவாதத்துக்குத் தலைமை யாசிரியர் கூடப் பயப்படறதுனாலதான்...''

''புரியுதுல்ல. நேர்மைக்கும், நியாயத்துக்கும் எல்லோரும் பணிஞ்சுதானே ஆகணும்.''

''ஐயா, இந்த விஷயத்துல உங்க பிடிவாதத்தைத் தளர்த்திக்கிட்டீங்கன்னா எம்.எல்.ஏ. மூலமா பல சௌகரியங்களை நீங்க அனுபவிக்கலாம்.''

''இதோ பாருப்பா. இப்பவே நான் சௌகரியமாகவும், சந்தோஷமாகவும்தான் இருக்கேன். வேற ஏதாவது பேசலாம்னாப் பேசு. இல்லை...'' என்று அவர் இழுக்கவும் எழுந்து வெளியேறினான் சிதம்பரம்.

''டேய், மூலைக்கடை பொன்னுசாமி நம்ம ஆளுகிட்ட தகராறு பண்றானாமே...''

''ஆமாண்ணே! சாராய வியாபாரம் அமோகமா நடக்குது. ஆனாலும் நமக்குத் தர வேண்டிய மாமூலைத் தர மறுக்கறான். அந்தக் கடை நீங்க அவனுக்குப் போட்ட பிச்சைங்கறதையே மறந்துட்டுப் பேசறான்'' என்றதும் தன் கட்டை மீசையை ஒரு விரலால் தடவியபடி யோசித்தார் தங்கராசு, எம். எல். ஏ.

''அவனை நம்ம ஆளுங்களை விட்டு கவனிக்கச் சொல்லுடா...'' என்றதும் அவசரமாகக் கிளம்பினான் எடுபிடி ஆள்.

''அந்தப் பொன்னுசாமி இன்னும் பத்தே நிமிஷத்துல என் கால்ல வந்து விழுந்து கதறணும்...'' என்று உறுமியபடி குறுக்கும், நெடுக்குமாய் நடந்தார்.

''அண்ணே....''

''யாருடா? சிதம்பரமா? போன விஷயம் என்னாச்சு?'' என்றதும் மிடறு விழுங்கினான்.

''என்னடா பேய் முழி முழிக்கற? வாத்தியாரைப் பார்த்தியா?''

''பார்த்தேன். விஷயத்தையும் எடுத்துச் சொன்னேன் அண்ணே. ஆனால் அவரு மசிய மாட்டேங்கறாரு.''

''அந்த ஆளு கர்வம் பிடிச்ச ஆசாமின்னு நான்தான் சொன்னேனே...'' என்று ஒத்துப் பாடினார் கூட வந்த கணக்கு வாத்தியார் சோமு.

வரும் மே மாதம் இப்போது உள்ள தலைமையாசிரியர் ஓய்வு பெறுகிறார். அடுத்த சீனியர் தசரதன். அவரை ஓவர் டேக் செய்ய இது அருமையான சந்தர்ப்பம் என்ற எண்ணத்துடன் எம். எல். ஏக்கு மேலும் தூபம் போட்டார் சோமு.

''இந்த விஷயத்துல வளைஞ்சு கொடுத்தால் என் மூலமாக் கிடைக்கும் அனுகூலங்களை எடுத்துச் சொன்னியாடா?''

சொன்னேண்ணே. இப்பவே மகிழ்ச்சியாத்தான் இருக்காராம்.''

''அப்படியா சொன்னாரு. இந்தக் காலத்துல இப்படிக் கூட ஒரு ஆளா?'' என்றபடி யோசித்தார் எம். எல். ஏ.

''டேய், காரை எடுத்துட்டுப் போய் கையோட அவரைக் கூட்டிட்டு வா'' என்று சிதம்பரத்துக்கு ஆணையிட்டார்.

''என்னங்க, எனக்குப் பயமாயிருக்கு. அந்த எம். எல். ஏ. அடிதடி, கொள்ளைக்கெல்லாம் அஞ்சாதவர்னு ஊரே சொல்

## ஃபிரிஜ் பரிசு : கூப்பன் நெ : 22

நேற்று வரை நந்தவனம் தொடர் முடியும் போது ஃபிரிஜ் பரிசைத் தட்டிக் கொண்டு போகப் போவது... யார் கண்டது, நீங்களாகவே இருக்கலாம்! இன்னும் சில அத்தியாயங்களே பாக்கி. கவனமாகப் படிக்கவும். வாரா வாரம் நாங்கள் வேண்டுமென்றே அந்தத் தொடர்கதையில் செய்யும் தவறைக் கண்டுபிடித்து இந்தக் கூப்பனைப் பூர்த்தி செய்து வைத்துக் கொள்ளவும். கதை முடிந்ததும் 5 - 10 வரி விமர்சனத்துடன் சேகரித்த கூப்பன்கள் அத்தனையையும் அனுப்பவும். மிக அதிகமான தவறுகளைச் சரியானபடி கண்டுபிடித்தவருக்கு ஃபிரிஜ் பரிசு என்றில், வேறு பலருக்கு ஆறுதல் பரிசுகளும் உண்டு. ஒருவருக்கு மேல் மிக அதிகமான தவறுகளைச் சரியாகச் சுட்டிக்காட்டியிருந்தால் குலுக்கலில் ஒருவர் தேர்வு. இந்த வாரம் வேண்டுமென்றே செய்யப்பட்ட...

தவறு : ____________

திருத்தம் : ____________

ஒது.''

''பயப்படாதே காமாட்சி. நியாயம் நம்ம பக்கம் இருக்கு. கடவுள் நம்மை நிச்சயம் கைவிட மாட்டார்.''

''நீங்க ஆயிரம் சமாதானம் சொன்னாலும் மனசு கேட்க மாட்டேங்குதுங்க....'' என்றவளை முதுகில் தட்டி ஆறுதல்படுத்தினார் தசரதன்.

''கவலைப்படாதே. நான் போயிட்டுச் சீக்கிரமே வந்துடறேன்'' என்றபடி கிளம்பினார்.

''வாங்க சார். இப்படி உட்காருங்க!'' என்று எதிரிலிருந்த சோபாவைக்காட்டினார் எம். எல். ஏ.

உட்கார்ந்தபடி சுற்றிலும் நோட்டமிட்டார் தசரதன். பணத்தின் செழுமை ஒவ்வோர் இடத்திலும் தெரிந்தது.

குடியினால் சிவந்த கண்ணும், பெருத்த உடலுமாய் இருந்த எம். எல். ஏ. வை நோக்கினார்.

''ஏதோ வரச் சொன்னீங்களாம்...''

''ஆமாம். நம்ம பையன் விஷயமாத்தான்'' என்று உடனே விஷயத்துக்கு வந்தார் எம். எல். ஏ.

''மன்னிக்கணும். தகுதியில்லாத உங்க பையனை பாஸ் போட்டு அவன் திருந்தவே முடியாதபடி பண்றதுக்கு என் மனசு இடம் கொடுக்கலே. என் மாணவன் தன்னோட திறமைகளை உணர்ந்து, அறிவாளியா உயரணும்னுதான் ஆசைப்படறேன். தன் அப்பாவோட செல்வாக்கினால் எதையும் சாதிக்க முடியுங்கற தவறான எண்ணம் அவன் மனசுல இப்பவே அரும்பிடுச்சுன்னா அவனுக்குன்னு ஒரு முகம் இல்லாமப் போயிடும். தன்னோட சொந்தக் காலில் நிற்கற தைரியமும் போயிடும்...'' என்று உறுதியான குரலில் சொன்னவரை ஒரு நிமிடம் உற்றுப் பார்த்தார் எம்.எல்.ஏ.

''உங்க பெயர், படிப்பு, சர்வீஸ் விவரங்களை ஒரு பேப்பரில் எழுதிக் கொடுக்க முடியுமா?'' என்று எம். எல். ஏ. கேட்கவும் புரியாமல் பார்த்தார் தசரதன்.

''எதுக்கு?''

''உங்களைப் பற்றிப் பெரிய இடத்துல சிபாரிசு பண்ணி ப்ரமோஷன் வாங்கிக் கொடுக்கறதுக்கு...'' என்று நக்கலாக வந்த சோமுவின் வார்த்தைகளைச் சட்டை செய்யாமல் எம். எல். ஏ.வை கேள்விக்குறியோடு பார்த்தார் தசரதன்.

''சோமு சொல்றது சரிதான் மிஸ்டர் தசரதன். உங்க பெயரை 'நல்லாசிரியர்' விருதுக்குச் சிபாரிசு பண்ணத்தான் விவரங்கள் கேட்டேன்...'' என்று எம்.எல்.ஏ. பணிவோடு சொல்லவும் நம்ப முடியாமல் பார்த்தனர் அனைவரும்.

''உங்க ஆச்சரியமும், அதிர்ச்சியும் எனக்குப் புரியுது. நானும் மனுஷன்தான். எனக்கும் இதயம்னு ஒண்ணு இருக்கு. என்னோட வாழ்க்கை பார்க்கறதுக்குத்தான் படாடோபமா இருக்கு. ஆனால் நித்ய கண்டம் பூரணாயுசுதான். எவன் நம்பளை எந்த நேரத்துல கவிழ்ப்பானோ, சுத்தி உள்ள பயலுக காலை வாரிடுவாங்களோ, அரசியல் எதிரிகள் என்னையும், என் குடும்பத்தையும் ஏதாவது பண்ணிடுவாங்களோன்னு நினைச்சு, நிம்மதி இல்லாம அல்லாடறேன். என் அதட்டல், உருட்டல் எல்லாம் வெளி வேஷம்தான். உள்ளுக்குள்ளே, உங்களை மாதிரி மனச்சாட்சிக்கு பயந்து, நிம்மதியா, சந்தோஷமா வாழறவங்களைக் கண்டு பொறாமைப்படறேன். ஆனால் சகதியிலே சுகம் கண்ட எருமை மாடு மாதிரி இதை விட்டு வெளியே வரவும் முடியலே...'' என்று கம்மிய குரலில் சொன்னவரை அனுதாபத்துடன் நோக்கினார் தசரதன்.

''என் பையனாவது இந்தச் சேறும், ச க தி யு ம ா ன வாழ்க்கையிலேயிருந்து வெளிப்பட்டு உங்களை மாதிரி நல்லவனா, நிம்மதியான வாழ்க்கையை அனுபவிக்கும்படி அவனை உருவாக்குவீங்களா வாத்தியாரய்யா...'' என்று இறைஞ்சியவரை அணுகிக் கையைப் பிடித்துக் கொண்டார்.

நாணயத்திற்கு இரு பக்கம் இருப்பது போல ஒவ்வொருவருக்கும் இரண்டு முகங்கள் உண்டு என்பதைப் புரிந்து கொண்டார் தசரதன்.

''கவலைப்படாதீங்க. இனிமே அவன் என் பையன் மாதிரி...'' என்று ஆறுதல் சொல்லி விட்டுக் கம்பீரமாக நடந்து வெளியேறிய தசரதனை மரியாதையுடன் பார்த்துக் கொண்டிருந்தனர் அனைவரும்.



டைரக்டர் (நடிகையிடம்) : ''இது சினிமாக் கல்யாணம்தான் மேடம்... இதுல கூட விவாகரத்து சீன் வேணும்னு நீங்க அடம்பிடிக்கிறது நல்லா இல்லே!''

- சீர்காழி வி. ரேவதி.

# வீட்டோடு மாப்பிள்ளை

ராமலிங்கத்துக்குக் கையும் ஓட வில்லை. காலும் ஓடவில்லை. பிரபல தொழில் அதிபர் தயாளன் படகுக் காரைத் தன் சின்னஞ்சிறு வீட்டின் முன் நிறுத்தி இறங்குவதைப் பார்த்துத் திடுக்கிட்டார் ராம லிங்கம்.

''வாங்கோ... வாங்கோ... ஏது? இந்த ஏழை வீட்டைத் தேடி....'' பரபரப்புடன், இருந்த ஒரே இரும்பு நாற்காலியைப் பிரித்துப் போட்டு விட்டுக் கை கட்டி நின்றார்.

''எல்லாம் உங்க பிள்ளை பி.ஈ. பரீட்சை யிலே ஸ்டேட் பர்ஸ்ட் வந்ததைப் பாராட் டத்தான் நேரிலேயே வந்தேன்'' என்று புன்னகையுடன் கூறிய தயாளன், நாற்காலி யில் அமர்ந்தார்.

ராமலிங்கத்துக்குப் பெருமையாக இருந்தது. ''அதான் நேத்து காலேஜ்லே நடந்த பாராட்டு விழாவிலே தியாகுவை வாய் நிறையப் பாராட்டிப் பரிசும் கொடுத் தீங்களே... அதுக்குள்ளேயா மறந்துடு வோம்?''

லட்சுமி கொண்டு வந்து வைத்த காப்பி யைப் பருகியபடி ராமலிங்கத்தைப் பார்த் தார் தயாளன்.

''உண்மைதான். தியாகுவோட திறமை யைப் பாராட்டறதோடு வேறு சில முக்கிய விஷயங்களும் பேச வேண்டியிருந்தது. அதான் நேரிலேயே பேச வந்திருக்கேன்.''

ராமலிங்கம் கேள்விக்குறியுடன் பார்த் தார்.

தயாளன் தொடர்ந்தார். ''என்னோட தொழில் நிறுவனங்களோட, புதுசா பில்டிங் கன்ஸ்ட்ரக்ஷன் ஒண்ணு ஆரம்பிக்கலாம்னு இருக்கேன். அதுக்குத் தகுதியான ஆள் தியாகுதான்னு நேத்தே முடிவு பண்ணிட் டேன்.''

ராமலிங்கத்துக்கு வானில் மிதப்பது போல் இருந்தது.

''பெயருக்கேத்தபடி தயாளன்தான் நீங்க.''

தயாளன் குறுக்கிட் டார். ''சொல்ல வேண்டி யது எல்லாத்தையும் சொல் லிடறேன். அப்புறம் உங்க முடிவைச் சொல்லுங்க. எனக்கு நிறைய தொழில் நிறுவனங்கள் இருக்கு. சரியா நிர்வகிக்கத் தகுந்த ஆள் இல்லை. நான் ஒரு ஹார்ட் பேஷண்ட். என் மனைவி போய் ரொம்ப வருஷம் ஆச்சு. எனக்கிருக் கிற சொத்தம் எல்லாம் என் ஒரே பெண் கல்பனாதான். எம். ஏ. முடிச்சிருக்கா. தாய்க்குத் தாயா என்னைக் கவனிக்கிறது பூரா கல்பனாதான். அவளைப் பிரிஞ்சு ஒரு வினாடி கூட என்னாலே உயிர் வாழ முடியாது. அதனாலே... உங்க பிள்ளை தியாகுவுக்கு என் பெண்ணைக் கல்யாணம் பண்ணி, தியாகுவை வீட்டோட வெச்சிக் கிட்டா என் பிரச்னைகள் தீரும். தியாகு என் தொழில் நிறுவனங்களை நல்லா நிர்வாகம் பண்ணுவான் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கு. இருக்கப் போற கொஞ்ச நாட்களை யும் நான் நிம்மதியாக் கழிப்பேன். தியாகுவுக்கும் நல்ல பிரகாசமான எதிர் காலம் கிடைக்கும். எனக்குப் பிறகு எல் லாமே கல்பனாவுக்கும் தியாகுவுக்கும் தானே!'' - தயாளன் ஆவலுடன் ராமலிங்கத் தைப் பார்த்தார்.

''ஆகக்கூடி என் பிள்ளையை விலை பேச வந்திருக்கீங்க. இல்லையா?'' - ராம லிங்கம் இறுகிய முகத்துடன் கேட்டார்.

தயாளன் பதறினார். ''நோ... நோ... அப்படி சீப்பா எடை போட வரலை. எனக்குத் தியாகுவோட நேர்மை, திறமை யிலே நிறைய நம்பிக்கை இருக்கு. அத னாலே உரிமையோட கேட்கறேன்.''

ராமலிங்கம் தீர்மானமாகக் கூறினார். ''மிஸ்டர் தயாளன்! உங்ககிட்டே பணம் காசு ஏராளமா இருக்கலாம். ஆனா எனக் கிருக்கறது ஒரே பிள்ளை. பிரகாசமான எதிர்காலம், ஆடம்பர வாழ்க்கைன்னு ஆசை காட்டி என் பிள்ளையை என்கிட்டேயிருந்து பிரிக்க, உங்களோட சேர்த்துக்க ஆசைப்பட றீங்க. இதுக்கு நான் சம்மதிக்கவே மாட் டேன்.''

''அவசரமில்லை. நீங்க யோசிக்க...''

பானுஸ்ரீ ராஜகோபாலன்

''இதிலே யோசிக்க என்ன இருக்கு? பணத்துக்காக என் பிள்ளையைப் பலிவிட நான் தயாரில்லே.''

தயாளன் முகம் வாட, தளர் நடையுடன் போய்க் காரில் ஏறிக் கொண்டார்.

கார் கிளம்பும் வரை காத்திருந்த லட்சுமி ஓடி வந்து ராமலிங்கத்தைப் பிலுபிலு வெனப் பிடித்துக் கொண்டாள்.

''உங்களுக்குக் கொஞ்சமாவது யோசனை இருக்கா? எப்படிப்பட்ட சான்ஸ் வந்தது தியாகுவுக்கு. நிமிஷமா வெட்டி விட்டுட்டீங்களே. அதுவும் பாவம், அவர் ஹார்ட் பேஷண்ட், ஒரே பொண்ணுன்னு வேறே சொல்றார். யோசிக்க, தியாகுவைக் கலந்திண்டு சொல்றேன்னாவது சொல்லி யிருக்கலாமில்லையா? ஒரேயடியா முடியா துன்னு முகத்திலே அடிச்ச மாதிரி பேசிட் டீங்களே?''

''நீ போடி உள்ளே.'' ராமலிங்கம் உறுமி னார்.

''என் பிள்ளை என் வீட்டிலேருந்துதான் வேலைக்குப் போய் வருவான். என் மருமகள்தான் இந்த வீட்டுக்குள்ளே வரணுமே தவிர, என் பிள்ளையை மருமகனா அந்த வீட்டுக்கு அனுப்ப நான் ஒண்ணும் வெட்கம் கெட்டவன் இல்லை. தெரிஞ்சுக்கோ.''

தியாகுவுக்கு இந்த விவரங்கள் எதுவும் சொல்லப்படவில்லை. அவனும் வேலை தேட ஆரம்பித்தான். ஸ்டேட் பர்ஸ்ட்டாக இருந்தும் வேலை அத்தனை சுலபமாகக் கிடைக்கவில்லை. அப்படி இப்படி அலைந்து யார் காலில் எல்லாமோ விழுந்து அம்பத்தூரில் சுமாராக ஒரு வேலை படிந் தது. அதை விடச் சுமாராக ஒரு பெண் ஜாதக மும் வந்தது. பெண்ணும் வேலை பார்க் கிறாள் என்கிற ஒரே பிளஸ் பாயிண்ட்டுக் காக அந்தப் பெண் சுமதியையே தியாகு வுக்குக் கல்யாணம் செய்து வைத்தார்கள்.

ராமலிங்கத்தின் லட்சியப்படி சுமதி மருமகளாகக் காலடி எடுத்து வைத்தாள்.

தியாகு சுமதி இருவருமே காலை எட்டு மணிக்கெல்லாம் கிளம்பி விட வேண்டும். தியாகுவுக்கு அம்பத்தூர் போக வேண்டும். சுமதிக்குப் பெரம்பூர். இரவு இருவரும் திரும்ப ஏழு அல்லது எட்டு ஆகி விடும்.

லட்சுமி மாங்கு மாங்கென்று உழைத் தாள். ராமலிங்கம் ரிடையர்டு ஆசாமி. அவரைப் பற்றிக் கவலையில்லை. தியாகு வுக்கும் சுமதிக்கும் காலை ஏழரைக்குள் சாப்பாடு, கைக்கு டிபன் இரண்டும் ரெடியாக வேண்டும். பகலெல்லாம் அவர்கள் அறையில் கிடக்கும் அலங் கோலங்களைச் சரி செய்ய வேண்டும். இரவு உணவு அவர்கள் வருவதற்குள் ரெடியாக வேண்டும். வந்து கை, கால் அலம்பிச் சாப் பிட்டு விட்டு டயர்டாக இருக்கிறது என்று



இருவரும் படுக்கை அறைக்குப் போய் விடு வார்கள். அப்புறம் காலையில்தான் வெளியே வருவார்கள்.

லட்சுமிக்கு மூச்சு முட்டியது. ஒரு நாளைப் போல் ஓய்வில்லாமல்

உழைக்க உடம்பு இடம் கொடுக்கவில்லை. தனிமையில் ராமலிங்கத்திடம் குத்திக் காட்டினாள்.

''அருமையான சான்ஸ் வந்தது. அதை உதறி விட்டு இப்படி என்னை வேலைக்காரி போல ராப்பகலா உழைக்க வைக்கறீங்களே...'' என்று அழுதாள்.

ராமலிங்கத்துக்கும் கொஞ்சம் உறுத்தலாக இருந்தது. ஒரு நாள் தியாகுவைக் கூப்பிட்டுப் பேசினார்.

''உங்கம்மா பாவம் வயசான காலத்திலே இப்படி ஓயாம வேலை செய்ய முடியலைப்பா. திடீர்னு படுத்துட்டான்னா என்ன செய்யறது?''

தியாகு பொறுமையுடன் கேட்டான். ''எனக்கும் தெரியறது அப்பா. நாங்க ரெண்டு பேருமே வேலைக்குப் போறதாலே அம்மா விடிகாலம்பறவே எழுந்து பரக்கப் பரக்க எல்லா வேலையும் செய்யறதைப் பார்த்தாப் பாவமா இருக்கு. ராத்திரி நாங்க ஆபீஸிலேருந்து திரும்பவும் ரொம்ப நேரமாயிடறது. எந்த ஒத்தாசையும் செய்ய முடியலே. கூடிய சீக்கிரம் ஏதாவது ஏற்பாடு பண்ணிடலாம் அப்பா. கவலைப்படாதீங்க'' என்று அப்பாவுக்கு ஆறுதல் சொன்னான்.

ராமலிங்கத்துக்கு நிம்மதியாக இருந்தது.

**ம**றுநாள் காலையில் கிளம்பிப் போன மகனும், மருமகளும் மத்தியானமே ஒரு டெம்போவுடன் திரும்பி வந்தார்கள்.

''எதுக்குடா இது?'' என்று திகைத்தார் ராமலிங்கம்.

''சுமதியோட அம்மா, அப்பா அவ அண்ணா வீட்டிலே இருந்தாங்க இல்லையா? அங்கே சரிப்படாமே பெரம்பூருக்கே திரும்பிட்டாங்க. சுமதிதான் யோசனை சொன்னா. அதன்படி நாங்க ரெண்டு பேருமே என் மாமனார் வீட்டோட போயிடறதா இருக்கோம். அவளுக்கும் ஆபீஸ் பெரம்பூரிலேயே. எனக்கும் அங்கே யிருந்து அம்பத்தூர் கிட்டக்கத்தான். பாவம் அவ அப்பா வயசானவர். நோயாளி வேற... நாங்க அவங்களோட இருந்தா அவங்களுக்கும் ஆறுதலா இருக்கும். இனிமே நீங்க ரெண்டு பேர்தானே? அம்மாவுக்கும் முன்னே மாதிரி வேலைச் சுமை இருக்காது...''

தியாகு பதிலுக்குக் காத்திராமல் மடமடவெனத் தனக்குச் சீராக வந்த சாமான்களோடு, சுமதியும் அவனும் லோன் போட்டு வாங்கிய டி.வி., பிரிட்ஜ், மிக்ஸி ஆகியவைகளையும் டெம்போவில் ஏற்றிக் கொண்டான்.

ராமலிங்கம் திக்பிரமையுடன் பார்த்துக் கொண்டே நின்றார். பின்னால் வந்து நின்ற லட்சுமியின் பார்வை அவர் முதுகைத் துளைப்பது போல் உணர்ந்து தலைகுனிந்தார்.



# சிவகாமியின் சபதம்



## ஐந்தாம் அத்தியாயம்
## காஞ்சி ஒற்றன்

வாதாபிச் சக்கரவர்த்தி, குண்டோதரன் விஷயத்தில் நன்கு கவனம் செலுத்தாமலே, ''இவனை யானையின் காலால் இடறச் செய்யுங்கள்!'' என்று கட்டளை விட்ட போது அருகிலிருந்த வாதாபியின் ஒற்றர் தலைவன் மிக்க பணிவோடு, ''அரசே! இவனைக் கொஞ்சம் விசாரணை செய்து விட்டுப் பிறகு தண்டனை நிறைவேற்றுவது நலம்'' என்று தெரிவித்துக் கொண்டான்.

''ஆம், ஆம், ஏதோ ஞாபகமாகச் சொல்லி விட்டேன். அவனை இப்படி அருகில் கொண்டு வாருங்கள்'' என்று புலிகேசி கட்டளையிடவும், குண்டோதரன் அருகில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டான்.

''அடே, நீ யார்? என்ன வேலையாகப் புறப்பட்டாய்? உண்மையைச் சொல்!'' என்று கேட்போர் உள்ளம் நடுங்கும் அதிகாரத் தொனியில் புலிகேசி வினவினான்.

வாதாபி மன்னன், சென்ற பதினெட்டு மாத காலத்தில் தமிழ் மொழியை நன்றாய்ப் பேசவும், பேசியதைத் தெரிந்து கொள்ளவும் பயின்றிருந்தான் என்பதை இந்த இடத்தில் நாம் குறிப்பிட வேண்டும். ஏற்கெனவே வாதாபி ராஜ்யத்தில் வழங்கிய பாஷையானது பாதித் தமிழ்ச் சொற்களைக் கொண்டிருந்தபடியால், தமிழ் மொழியைப் பயிலுவதில் புலிகேசிக்கு அதிகச் சிரமம் ஏற்படவில்லை. புலிகேசி கேட்ட கேள்விக்கு விடையாகக் குண்டோதரன், ''ஐயா! நான் என் தாயாருடைய மகன். கொள்ளிடத்துக்கு அக்கரையில் திருவெண்காட்டுக்குப் போகலாமென்று கிளம்பினேன். திருவெண்காட்டு வைத்தியரிடமிருந்து மருந்து வாங்கிக் கொண்டு வருவதற்காகப் போகிறேன்'' என்றான்.

''எதற்காகடா மருந்து! உனக்கு என்ன கேடு வந்து விட்டது?'' என்று புலிகேசி கேட்டதும், குண்டோதரன் பயத்தினால் நடுங்கியவன் போலப் பாசாங்கு செய்து, ''எனக்காக இல்லை, ஐயா! அம்மாவுக்கு மருந்து. என் தாயார் அவல் இடிக்கும் போது உரலை விழுங்கி விட்டாள், அதற்காக!'' என்றான்.

இந்த விடை அங்கிருந்தவர்கள் சிலருக்குச் சிரிப்பை உண்டாக்கிற்று. புலிகேசியின் முகத்திலும் இலேசான புன்னகை தோன்றியது.

''என்னடா உளறுகிறாய்? உன் அம்மா உரலை விழுங்கினாளா?'' என்று அதட்டிக் கேட்டான்.

''இல்லை, உரலை விழுங்கவில்லை, உலக்கையைத்தான் விழுங்கினாள்!'' என்

**அமரர் கல்கி**

றான் அதிக நடுக்கத்துடன் குண்டோதரன்.

''உரலை விழுங்கினாளா, உலக்கையை விழுங்கினாளா? நிஜத்தைச் சொல்!'' என்று கோபமான குரலில் கர்ஜித்தான் புலிகேசி.

''இல்லை, இல்லை! என் அம்மாவை உரல் விழுங்கி விட்டது!'' என்றான் குண்டோதரன்.

''அடே, என்னிடம் விளையாடு கிறாயா? - உன்னை என்ன செய்வேன், தெரியுமா?''

''ஐயா! மன்னிக்க வேண்டும். உங்களை எல்லாம் பார்த்தால் எனக்கு மிகவும் பயமாய் இருக்கிறது. அதனால் மனத்திலே ஒன்று இருக்க, நாக்கு எதையோ சொல் கிறது.''

''இப்போது பயம் இல்லாமல் நிதான மாக யோசித்து உள்ளதை உள்ளபடி சொல்லு!''

''என் தாயார் அவல் இடித்த போது உலக்கை தவறிக் கையில் விழுந்து விட்டது. அதனால் அம்மாவின் கையில் காயமாகி விட்டது. காயத்துக்கு மருந்து வாங்குவதற் காகத் திருவெண்காட்டு நமச்சிவாய வைத் தியரிடம் போகிறேன்.''

''இவ்வளவுதானே, வேறு ஒன்றும் இல்லையே? சத்தியமாய்ச் சொல்!'' என்று புலிகேசி கர்ஜித்தான்.

''ஆம், ஐயா! சத்தியமாகச் சொல்லுகி றேன். உலக்கைக்குத்தான் காயம் பட்டது!'' என்று குண்டோதரன் உளறினான்.

**வா**தாபிச் சக்கரவர்த்திக்குத் திடீ ரென்று சிரிப்பு பீறிக் கொண்டு வந்தது. சற்று நேரம் விழுந்து விழுந்து சிரித்து விட்டு, பக்கத்திலிருந்த ஒற்றர் தலைவனைப் பார்த்து, ''இந்தப் பைத்தியக்காரனை என்ன செய்கிறது?'' என்று கேட்டான்.

''சக்கரவர்த்தி! இவன் பைத்தியக்காரன் அல்ல. காரியப் பைத்தியமாகத் தோன்று கிறது. மிக்க நெஞ்சழுத்தமுள்ளவனாகக் காணுகிறான். இவனை வேறு விதத்தில் பரிசோதிக்க வேண்டும்'' என்றான் வாதாபி யின் ஒற்றர் தலைவன்.

குண்டோதரனைப் பிடித்துக் கொண்டு வந்திருந்த வீரர்களின் தலைவன் சக்கர வர்த்தியின் அருகில் நெருங்கி, ''பிரபு! இதோ இந்த ஓலை இவனைச் சோதித்த போது அகப்பட்டது'' என்பதாகச் சொல்லி விட்டுக் கொடுத்தான்.

புலிகேசி அதை வாங்கி முன்போலவே அங்கிருந்த லிகிதனிடம் கொடுக்க, அவன் ஓலையைப் படிக்கலானான் :

''மீனக் கொடியோனுக்கு ரிஷபக் கொடியோன் விடுத்த நிருபம். வடதேசத்துக் கடுவாய் உம்மைக் காண்பதற்காகக் கொள் ளிட நதிக்கு வந்திருப்பதாகத் தெரிகிறது. புலியின் ஆசை வார்த்தைகளில் மயங்கி விட வேண்டாம். சேற்றில் அகப்பட்டுக் கொண்ட புலி பிராமணனைத் தோத்திரம் செய்து ஏமாற்றிய கதை ஞாபகம் இருக்



கட்டும். காஞ்சிரிஷபத்தை வாதாபிப் புலியினால் ஒன்றும் செய்ய முடியாது என்பதை உறுதியாக நம்பவும். புலி சேற்றிலேயே கிடந்து பட்டினியால் செத்த பிறகு காஞ்சி ரிஷபத்துக்கும் மதுரையின் பெண் மானுக்கும் நீடித்த உறவு ஏற்பட இடம் இருக்கிறது. ஆனால், புலியின் பசியைத் தீர்க்க உதவி செய்தால் அது மதுரையின் மானுக்குத்தான் முடிவில் ஆபத்தாக முடியும். இதையும் மனத்தில் வைத்துக் கொண்டு உசிதப்படி நடந்து கொள்ளவும்.''



இதை லிகிதன் படித்து வரும்போதே வாதாபிச் சக்கரவர்த்திக்கு அதன் உட்கருத்து இன்னதென்று விளங்கி விட்டது. கோபத்தினால் அவனுடைய உடம்பெல்லாம் நடுங்கிற்று. பற்களை அவன் நறநறவென்று கடித்துக் கொண்ட சப்தம் அருகில் இருந்தவர்கள் எல்லாரையும் நடுங்கச் செய்தது.

குண்டோதரன், சற்று முன்னால் பயந்தவன் போல நடித்து 'உரல் உலக்கை' என்றெல்லாம் பேசியதையும், அதைக் கேட்டுத் தான் சிரித்ததையும் நினைத்த போது உண்டான அவமான உணர்ச்சியானது புலிகேசியின் கோபத்திற்கு இன்னும் தூபம் போட்டது.

''அடே ஒற்றா! வாதாபிப் புலிகேசியுடனா விளையாடத் துணிந்தாய்? கொண்டு போங்கள் இவனை. இவனுடைய கண்களைப் பிடுங்கி விட்டு, கழுத்தை வெட்டிக் கழுகுக்குப் போடுங்கள்!'' என்று கர்ஜித்தான்.

இப்படிக் குரூரமான ஆக்ஞையிட்ட போது, புலிகேசியின் கழல் போலச் சிவந்த கண்கள் குண்டோதரனை உற்று நோக்கின. அவ்விதம் நோக்கிய கண்களில் திடீரென கோபம் தணிந்து, அளவில்லா ஆச்சரியத்தின் அறிகுறி தென்பட்டது.

ஏனெனில், குண்டோதரனை வீரர்கள் இழுத்துக் கொண்டு போக முயன்ற போது, அவனுடைய தலையானது விசித்திரமான சில சமிக்ஞைகளைச் செய்தது. உற்றுக் கவனித்த புலிகேசிக்கு, அந்தச் சமிக்ஞைகள் ஸ்வஸ்திகச்* சின்னத்தின் கோலமாக அமைந்தன என்பது தெரிய வந்தது. அதனாலேதான் அவனுடைய கண்களில் அத்தகைய வியப்புக் குறி தோன்றியது.

''நில்லுங்கள்!'' என்று புலிகேசி மறுபடியும் கூவினான். ''இந்த ஒற்றனிடம் நான் இன்னும் சில விஷயங்கள் கேட்க வேண்டும். இவனை இங்கேயே தனியாக விட்டு விட்டு மற்றவர்கள் கூடாரத்துக்கு வெளியே போங்கள்'' என்று கட்டளையிட்டான்.

* ஸ்வஸ்திகச் சின்னம் என்றதும், வாசகர்களுக்கு ஜெர்மனியில் நாஜிக் கட்சியின் சின்னமாக அது விளங்குவது ஞாபகம் வரும். ஆனால், ஹிட்லரைப் பார்த்துப் பூர்வீக இந்தியர்கள் காப்பியடிக்கவில்லை; அந்த நாளில் புத்தர்களும் ஜைனர்களும் சில சமயங்களில் ஸ்வஸ்திகச் சின்னத்தை உபயோகப்படுத்தினார்கள் என்பது சரித்திர ஆதாரம் பெற்ற விஷயம்.

# ஆறாம் அத்தியாயம்
# பிக்ஷுவின் செய்தி

சக்கரவர்த்தியின் கட்டளையைக் கேட்டதும் கூடாரத்திலிருந்த பலர் உடனே வெளியேறினார்கள். ஒற்றர் தலைவனும் இன்னும் சிலரும் வெளியேறுவதற்குத் தயங்கிய போது புலிகேசி அவர்களைக் கோபத்துடன் பார்த்து, ''போங்கள்!'' என்று கர்ஜனை செய்யவே அவர்களும் போய் விட்டார்கள்.

தனித்து நின்ற குண்டோதரனைப் பார்த்து, புலிகேசி சாந்தமான குரலில், ''அப்பா நீ யார்? யாரிடமிருந்து வந்தாய்? அந்தரங்கச் செய்தி ஏதேனும் கொண்டு வந்திருக்கிறாயா?'' என்று கேட்டான்.

''ஆம், மகாப் பிரபு! பிக்ஷுவிடமிருந்து தான் வந்தேன். சேதி கொண்டு வந்திருக்கிறேன்'' என்றான் குண்டோதரன்.

''அப்படியா! என்ன செய்தி கொண்டு வந்தாய்?'' என்று பரபரப்புடன் சொல்லிக் கொண்டே புலிகேசி சிம்மாசனத்திலிருந்து துள்ளிக் குதித்து எழுந்தான்:

''சீக்கிரம் சொல்லு! பிக்ஷு எங்கே இருக்கிறார்? சௌக்கியமாய் இருக்கிறாரா? ஏன் இத்தனை நாளாகச் செய்தி ஒன்றும் அனுப்பவில்லை? உன்னிடம் என்ன சொல்லி அனுப்பினார்?'' என்று புலிகேசி சரமாரியாய்க் கேள்விகளை அடுக்கினான்.

குண்டோதரனுடைய கண்களில் திடீரென்று கண்ணீர் பெருகிற்று. விம்முகின்ற குரலில் ''சத்யாச்ரயா! என் குருநாதர் காஞ்சியில் பாஷாண்டிப் பல்லவனுடைய சிறையில் இருக்கிறார்!'' என்றதும், புலிகேசி ''ஆஹா! நான் உயிரோடிருக்கும் போது பிக்ஷு சிறையில் இருப்பதா? என்ன அவமானம்! காவித் துணி அணிந்த பிக்ஷுவைச் சிறையில் இடும் அளவுக்கு மகேந்திர பல்லவன் அவ்வளவு நீசனாகி விட்டானா!'' என்று சீறினான்.

பிறகு, ''எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லு! பிக்ஷு எப்படிச் சிறைப்பட்டார்? நீ எப்போது அவரைப் பார்த்தாய்? என்ன செய்தி சொல்லியனுப்பினார்?'' என்று கேட்டான்.

குண்டோதரன் சொன்னான்: ''ஏழு நாளைக்கு முன்பு சென்ற வெள்ளிக் கிழமையன்றுதான் அவரைப் பார்த்தேன். மதத் துரோகியும், குருத் துரோகியும், பாஷாண்டியுமான மகேந்திர பல்லவன் தனது இராஜ்யத்திலுள்ள புத்த பிக்ஷுக்களையெல்லாம் பிடித்து அடைத்து வைத்திருக்கும் சுரங்க மண்டபத்துக்குள்ளே பிக்ஷுவைப் பார்த்தேன். மன்னர் மன்னா! முதலில் புத்த பிக்ஷு சொல்லியனுப்பிய செய்தியைத் தங்களிடம் சொல்லி விடுகிறேன். அதுவரையில் இந்தப் பாழும் உயிருக்கு எதுவும் வந்து விடக் கூடாதே என்று எவ்வளவோ கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். ஆகா! சென்ற ஏழு நாட்களில் இந்த ஏழைக்கு எவ்வளவு ஆபத்துக்கள் வந்தன? என் குருநாதருடைய செய்தியைத் தங்களிடம் சொல்லி விட்டேனானால், அப்புறம் இந்த அற்ப உயிருக்கு என்ன நேர்ந்தாலும் கவலைப்பட மாட்டேன். தங்களை எப்படியாவது நேருக்கு நேர் தரிசித்து விட வேண்டுமென்று என்னவெல்லாமோ யுக்தி செய்தேன். தங்களைத் தரிசிக்க வேறுவிதமாய் முடியாதென்று எண்ணிக் காஞ்சியிலிருந்து வந்த நமது வீரர்களிடம் வேண்டுமென்றே அகப்பட்டுக் கொண்டேன். பிரபு! பிக்ஷு தங்களிடம் சொல்லும்படியாக முக்கியமாக நாலு செய்திகளைச் சொல்லியிருக்கிறார். அவற்றைக் கேளுங்கள்.'' இத்தகைய பூர்வ பீடிகையுடன் குண்டோதரன் புத்த பிக்ஷுவின் நாலு செய்திகளையும் வரிசைக் கிரமமாகச் சொல்லத் தொடங்கினான்.

முதலாவது செய்தி, ''மதுரைப் பாண்டியனை நம்ப வேண்டாம்'' என்பது. இந்த ஜயந்தவர்ம பாண்டியன்தான் பிக்ஷுவை மதுரையில் சிறைப்பிடித்து வைத்திருந்தவன். அச்சமயம் மகேந்திர பல்லவனுக்கும் ஜயந்தவர்மனுக்கும் ஏதேதோ அந்தரங்க ஓலைப் போக்குவரவு நடந்தது. அவர்கள் இரண்டு பேரும் சேர்ந்து ஏதோ துரோகமாகச் சூழ்ச்சி செய்திருக்க வேண்டுமென்று பிக்ஷு கருதுகிறபடியால் பாண்டியனிடம் சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டியது. அவனை முழுவதும் நம்பி எந்தக் காரியத்திலும் இறங்கி விடக் கூடாது.

இரண்டாவது செய்தி, கங்க நாட்டுத் துர்விநீதன்தான் பிக்ஷுவை மகேந்திர பல்லவனுக்குக் காட்டிக் கொடுத்து, காஞ்சியில் அவர் சிறைப்படுமாறு செய்தவன். புலிகேசியின் கண்ணில் மண்ணைத் தூவுவதற்காகப் பல்லவனுடன் சண்டை போடுவது போல் போட்டு விட்டு, சைனியத்தோடு ஓடி ஒளிந்து கொண்டிருக்கிறான். புலிகேசி வாதாபிக்குத் திரும்பிப் போகாதபடி செய்து விட்டால், தன்னுடைய மருமகன் விஷ்ணுவர்த்தனன் சளுக்க சாம்ராஜ்யத்தின் ஏக சக்ராதிபதியாகி விடுவான் என்று கங்க நாட்டான் அந்தரங்க ஆசை கொண்டிருக்கிறான். சமயம் நேர்ந்தால் துரோகி துர்விநீதனுக்குத் தக்க தண்டனை விதிக்க வேண்டும்.

மூன்றாவது முக்கியமான விஷயம்

# அருள்வாக்கு

கோயில்களின் சூழ்நிலை அமைதியாக, தூய்மையாக இருக்க வேண்டும். பகவத் ஸ்மரணை தவிர மற்ற நினைவுகள் மறந்து விடும்படியாக இருக்க வேண்டும். ஆனால் இப்போது என்ன பார்க்கிறோம்? பெரும்பாலான க்ஷேத்திரங்களில் கோயிலைச் சுற்றி ஏகப்பட்ட கடைகள் வந்து விட்டன. டீக்கடை, சிகரெட் கடை எதுவுமே பாக்கியில்லை. கோயில் அதிகாரிகளே கோயிலுக்கு வருமானம் கிடைக்கிறது என்பதால் இந்த இடங்களை வாடகைக்குக் கொடுக்கிறார்கள். - அதாவது, அநேகமாக ஸ்வாமியைத் தவிர கோயிலையே வாடகைக்குக் கொடுத்திருப்பதாகச் சொல்லலாம். இம் மாதிரியான சூழ்நிலையில் தெய்வ சாந்நித்தியத்தை நாம் கிரகித்துக் கொள்கிற சக்தி குறைகிறது. நம் பக்தி சுற்றுச் சூழலால் குறைகிறது.

ஆபீஸ் கட்டடங்கள், 'காட்டேஜ்'கள் எல்லாம் இப்போது பல க்ஷேத்திரங்களில் ஏராளமாக முளைத்து விட்டன. அங்கெல்லாம் தெய்வ சம்பந்தமற்ற காரியங்கள் நிறைய நடக்கின்றன. இது சாந்நித்தியத்தைப் பாதிக்கிறது. ஏதோ எட்டாக் கையில் இருக்கிற கோயில்களில்தான் விச்ராந்தியான சூழல் இருக்கிறது. அபிவிருத்தி என்ற பெயரில் இவற்றிலும் அதிகாரிகள் அநாசாரத்தைப் புகுத்தி விடப் போகிறார்களே என்று பயமாக இருக்கிறது.

இப்போது கோயில்களுக்குத் தனித்தனி நிர்வாகம் இல்லாமல் ஒரே சர்க்கார் நிர்வாகத்தில் இருப்பதால் அவர்களுக்குப் பொது ஜனங்கள் எடுத்துச் சொல்ல வேண்டும். துரதிருஷ்டவசமாக, ஆலய ஆபீசர்கள் ஏதாவ



தொரு நல்ல காரியத்தை ஆரம்பித்து முடிக்குமுன்பே வேறு ஊருக்கு மாற்றப்பட்டு விடுகிறார்கள். 'செய்கிற காரியத்தைப் பூர்த்தி செய்து பலனைப் பார்க்கலாம்' என்கிற உற்சாகம் இருந்தால்தான் அதிகாரிகளிடமிருந்து சிறப்பான பணியை எதிர்பார்க்க முடியும்.

ஆலயங்களின் உட்புறமும், சூழ்நிலையும் சுத்தமாக இல்லாத வரையில் ஆஸ்திக காரியம் எத்தனைதான் நடந்தாலும், எத்தனை கும்பாபிஷேகங்கள் நடந்தாலும், நாம் திருப்திப்படுவதற்கில்லை. கும்பாபிஷேகத்துக்கு அப்புறம் சாந்நித்யம் நிலைத்திருக்க வழி பண்ணா விட்டால் என்ன பிரயோஜனம்? பிரஜைகள் இவ் விஷயத்தில் தீவிரமான கவனம் செலுத்தினால், அதிகாரிகளுக்கும் சர்க்காருக்கும் பொறுப்புணர்ச்சி அதிகரித்து ஆவன செய்வார்கள். பொதுமக்களின் ஏகோபித்த அபிப்பிராயத்துக்கு (Public opinion) அந்த சக்தி உண்டு.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

பிக்ஷு தெரிவிக்கச் சொன்னது என்னவென்றால், மகேந்திர பல்லவன் ஹர்ஷவர்த்தனச் சக்கரவர்த்திக்கு ஏதோ இல்லாததும் பொல்லாததும் எழுதி ஓலை அனுப்பியிருப்பதாகத் தெரிய வருகிறது. அதைப் பற்றிய உண்மையைத் தீர விசாரித்து உசிதப்படி செய்ய வேண்டும். மகேந்திர பல்லவன் குறைந்தது இன்னும் ஒரு வருஷத்துக்குக் கோட்டைக்குள்ளேயே கஷ்டமில்லாமல் இருக்க முடியும்; அவ்வளவு உணவுப் பொருள் சேகரித்து வைத்திருக்கிறான். இந்த நிலைமையில், காஞ்சி முற்றுகை மேலும் நீடித்துக் கொண்டிருப்பது உசிதமா, அல்லது மீண்டும் ஒரு தடவை கோட்டையைக் கைப்பற்ற முயல்வது நல்லதா என்று யோசித்துத் தீர்மானிக்க வேண்டும்.

நாலாவது, எல்லாவற்றிலும் முக்கியமாகப் புத்த பிக்ஷு சொல்லியனுப்பிய விஷயம் இது! உத்தராபதத்துச் சக்கரவர்த்தி ஹர்ஷவர்த்தனர் சிற்பங்கள், சித்திரங்கள் முதலிய கலைகளில் அதிகப்பற்றுள்ளவர். தென் பல்லவ ராஜ்யத்தில் அநேக இடங்களில் சிற்ப சித்திரக் கலை மண்டபங்கள் இருக்கின்றன. மாமல்லபுரத்தில் மகேந்திர பல்லவன் ஹர்ஷவர்த்தனரை அழைத்துக் காட்டுவதற்காகவே அற்புத சிற்ப வேலைகளைச் செய்திருக்கிறான். இந்தச் சிற்ப வேலைகளுக்கு ஏதாவது சளுக்க வீரர்களால் கெடுதல் நேர்ந்ததாகத் தெரிந்தால், அதை மகேந்திர பல்லவன் தனக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக்

கொள்வான். ஹர்ஷவர்த்தனருடைய விரோதத்துக்குச் சளுக்கர் குலம் ஆளாக வேண்டி நேரும். ஆகையால், பல்லவ நாட்டுச் சிற்பங்களுக்கோ சிற்பிகளுக்கோ சளுக்க வீரர்களால் எவ்விதக் கெடுதலும் நேராதபடி பார்த்துக் கொள்ள வேண்டும்.

மேற்கூறிய நாலு செய்திகளையும் தட்டுத் தடுமாறிச் சொல்லி விட்டு, ''என் குருநாதருக்கு நான் கொடுத்த வாக்கை நிறைவேற்றி விட்டேன், இனிமேல் என் உயிரைப் பற்றிக் கொஞ்சமும் கவலை இல்லை!'' என்று கூறி, குண்டோதரன் விம்மி அழத் தொடங்கினான்.

''அடே! நீ என்னத்திற்காக அழுகிறாய்?'' என்று புலிகேசி கேட்ட போது, குண்டோதரன், ''ஐயா! சளுக்கர் சைனியம் என்றைக்குக் காஞ்சிக் கோட்டை மதிலைத் தாண்டி உள்ளே பிரவேசிக்கிறதோ, அன்றைக்கே சிறைப்பட்டிருக்கும் புத்த பிக்ஷுக்கள் எல்லோரையும் கழுவில் ஏற்றி விடுவதாக மகேந்திர பல்லவன் சொல்லியிருக்கிறானாம். இதைத் தங்களிடம் சொல்ல வேண்டாமென்று பிக்ஷு சொன்னார். ஆனாலும், தங்களிடம் சொல்லாமலிருக்க எனது மனம் கேட்கவில்லை. என் குருநாதர் நான் பிறந்து வளர்ந்த காஞ்சி நகரின் நாற்சந்தியில் கழுவில் ஏற்றப்பட்டு காக்கை கழுகுகளால் கொத்தப்படுவார் என்பதை நினைக்கும் போது, எனக்குத் தாங்க முடியாமல் அழுகை வருகிறது!'' என்றான்.

சற்று நேரம் ஆழ்ந்த சிந்தனையில் இருந்து விட்டுப் புலிகேசி குண்டோதரனைப் பார்த்து, ''நீ எப்படிப் பிக்ஷுவைச் சந்தித்தாய்? எப்படிக் கோட்டைக்கு வெளியே வந்தாய்?'' என்று கேட்க, குண்டோதரன் திருப்திகரமான மறுமொழி அளித்தான். பிக்ஷுவின் யோசனைப்படி தான் பல்லவ ஒற்றர் படையில் சேர்ந்திருப்பதாகவும், அதனால் காஞ்சிக் காராக்கிரகத்தில் அடைக்கப்பட்டிருக்கும் புத்த பிக்ஷுக்களுடன் பேசித் துப்பு அறிவதற்காகத் தன்னை நியமித்திருந்ததாகவும், அதிர்ஷ்டவசமாகப் பாண்டியனுக்கு ஓலை கொண்டு வரும் வேலை தனக்குக் கிடைத்ததென்றும், கோட்டைக்கு வெளியே வருவதற்கு இரகசியச் சுரங்க வழி இருக்கிறதென்றும், அந்த வழியாகத் தான் வந்ததாகவும், பாண்டியனிடம் ஓலையைச் சேர்ப்பிக்கும் எண்ணமே தனக்குக் கிடையாதென்றும் கூறினான்.

அதன் மேல் புலிகேசி, ''திரும்பப் பிக்ஷுவிடம் போய்ச் செய்தி சொல்ல உன்னால் முடியுமா?'' என்று கேட்டான்.

''பிரபு! திரும்பச் செல்வது என் உயிருக்கு அபாயம். இருந்தாலும் இந்த உயிரைப் பற்றி இனிமேல் எனக்கு என்ன கவலை? தாங்கள் போகச் சொன்னால் போகிறேன்'' என்றான் குண்டோதரன்.

''ஆம், அப்பா! நீ கட்டாயம் திரும்பிப் போக வேண்டும். போய் பிக்ஷுவிடம் இன்னும் பத்து நாளைக்குள் காஞ்சிமா நகரில் அவரை நானே நேரில் பார்ப்பதாகச் சொல்ல வேண்டும். எது நேர்ந்தாலும், என்ன கேள்விப்பட்டாலும் அவர் கொஞ்சமும் கலங்க வேண்டாமென்றும், எல்லா விவரங்களையும் நேரில் சொல்லுவதாகவும் கூற வேண்டும். உன்னால் முடியுமா?'' என்று புலிகேசி கேட்டான்.

பிக்ஷுவைப் பத்து நாளில் நேரில் பார்க்கப் போவதாகப் புலிகேசி சொன்னவுடன், குண்டோதரனுக்கே உண்மையில் தூக்கி வாரிப் போட்டது. அவன் முகத்திலும் கண்களிலும் நாம் என்றும் கண்டிராத ஆச்சரியத்தின் அறிகுறி காணப்பட்டது!

மேற்கூறிய சம்பாஷணை நடந்து ஒரு வாரத்திற்குப் பிறகு காஞ்சிமா நகரின் தெற்குக் கோட்டை வாசலையும் மதிலையும் காவல் புரிந்த வீரர்கள் எல்லாம் குண்டோதரனைப் போலவே ஆச்சரியக் கடலில் மூழ்கினார்கள். ஏனெனில், அந்தக் கோட்டை வாசலுக்கு எதிரே அகழிக்கு அக்கரையில், வராகக் கொடி பிடித்த தூதர்கள் இருவர் குதிரை மேல் நிராயுதபாணிகளாக வந்து நின்று, தாங்கள் கொண்டு வந்திருந்த கொம்பை வாயிலே வைத்து, 'பூம்', 'பூம்', 'பூம்' என்று ஊதினார்கள். அவர்களுடைய தோற்றமும், அந்தக் கொம்பின் முழக்கமும் அவர்கள் சமாதானத்தை நாடி வந்திருக்கும் புலிகேசியின் தூதர்கள் என்பதை எடுத்துக் காட்டின.

''ஆஹா! இதென்ன விந்தை! வாதாபிச் சக்கரவர்த்தியா சமாதானத் தூது அனுப்பியிருக்கிறார்? இது கனவா, நனவா?'' என்று காஞ்சிக் கோட்டையைக் காவல் புரிந்த பல்லவ வீரர்கள் அளவில்லா வியப்பை அடைந்தார்கள். நம்ப முடியாத அந்த அதிசயச் செய்தியானது, அதி சீக்கிரத்தில், மந்திராலோசனை மண்டபத்தில் இருந்த மகேந்திர பல்லவரைச் சென்றடைந்தது.

(தொடரும்)

# நாகரிகம்

அந்த நேரத்தில் அந்தச் சூழலில் 'அய்யா' அங்கே வருவாரென்று இஞ்சித்தும் எதிர்பார்த்திருக்கவில்லை சிவராஜன்.

வான வீதியில் நட்சத்திரங்கள் விளக்கேற்றத் துவங்கியிருந்த அந்திக் கருக்கல். கூத்தும் கும்மாளமுமாய் விடுதி மாணவர்கள், முன் வராந்தாவில் சம்பாஷித்துக் கொண்டிருந்த சூழல். இரவுப் போஜனத்திற்கு 'மணி' அடிக்க இன்னும் அரை மணிப் பொழுது இருந்தது. சிவராஜனும் சகமாணவர்களுடன் அரட்டையடித்துக் கொண்டு தன்னிலை மறந்திருந்தான். திடீரென ஸ்மரணை தட்டியவனாய்ச் சுதாரித்துக் கொண்டு பார்த்தான். தார்ச்சாலையிலிருந்து விடுதிக்கு வரும் பாதையின் மங்கலான வெளிச்சத்தில் அய்யா வந்து கொண்டிருந்தது தெரிந்தது.

அவனுக்குத் திக்கென்றிருந்தது. இந்த இரண்டு வருஷக் கல்லூரி விடுதி வாழ்க்கையில் ஒருநாளும் வந்திராத அய்யா, இன்று என்ன திடுதிப்பென்று வருகிறார் என்றிருந்தது. விடுதி வாட்ச்மேன் வழி காட்ட அருகில் வந்துவிட்டிருந்தார் அய்யா.

''என்னய்யா -?'' என்று சொல்ல வாயெடுத்தவன் வார்த்தையை விழுங்கிக் கொண்டு, ''என்னப்பா, இந்த நேரத்துல...'' என்று ஆச்சரியப் பட்டவனைப் போல அவரை ஏறிட்டு விளித்து நின்றான்.

'அப்பா' என்றழைத்ததில் அவனுக்கு உடன்பாடில்லாதிருந்திருக்க வேண்டும். மனசுக்குள் முள் குத்திக் கொண்ட வலி தெரிந்தது. சொந்த ஊரில் சொந்தக்காரர்கள் மத்தியிலெல்லாம் பிறப்பிலிருந்து இன்று வரை 'அய்யா.... அய்யா...' என்றழைத்துக் கொண்டிருந்தவனுக்குத் திடீரென இந்தக் கல்லூரி விடுதியில் வைத்து எல்லா மாணவர்களின் முன்னிலையில் 'அய்யா...' என்றழைக்க அருவருப்பாய்த் தோன்றியது. ஒருநாள் கூத்துக்காக மீசையை எடுத்துக் கொண்ட நாடகம் உறுத்தியது.

'அய்யா...' என்றழைக்கவும் அவனுக்குக் கௌரவம் இடம் தரவில்லை. சகல மாணவர்களைப் போல அவனும் ஒரு பட்டதாரிக்குப் படித்துக் கொண்டு, இன்னும் படிக்காத ஒரு பட்டிக்காட்டானைப் போலவே, 'அய்யா... எப்பய்யா வந்தீரு?' என்று கேட்டு நின்றால் அவர்களெல்லோரும் என்ன நினைப்பார்கள் என்றே மனம் ஓடிற்று. அது அவனுக்குக் கௌரவக் குறைச்சலென்றாலும் பரவாயில்லை; அவனின் அய்யாவுக்குக் கௌரவக் குறைச்சலாகப் போய்விடுமே என்றே ஆதங்கப் பட்டான் அவன். இத்தனை படிப்புப் படித்தும் பெற்றவரை 'அப்பா... நீங்க வாங்க...' என்று மரியாதை தந்து அழைக்கத் தெரியாத சுத்த மடையன் சாம்பிராணி என்று மற்றவர்கள் இழித்தும் பழித்தும் பேசிவிடக் கூடாது என்பதில் அக்கறையாய் இருந்தான்.

''ஒட்னே காலேசுக்குப் பீசு கட்டணும்னு நேத்து லட்டரு போட்டிருந்தில்ல... அதுதான் பதறி அடிச்சு வட்டிக்குப் பணம் வாங்கியாந்தேன்....''

விகற்பமில்லாமல் சொல்லி நின்றார் அய்யா. அவர் சொன்ன பிறகுதான் அவனுக்கு ஞாபகம் வந்தது - இன்னும் ஒரு வாரத்துக்குள் கல்லூரிக் கட்டணம் கட்டவில்லையென்றால் கல்லூரியிலிருந்து வெளியேற்றப்படுவதாக நிர்வாகம் எச்சரிக்கை பண்ணியிருந்ததால் உடனே பெற்றோருக்கு லட்டர் போட்டிருந்தான் சிவராஜன். ஐநூறுக்கு எங்கே போவார் அய்யா. யாரிடமாவது வட்டிக்கு வாங்கிக் கொண்டுதான் வந்திருப்பார். கூலி வேலைக்கும் விறகு பொறுக்கவுமே முடிந்திருந்த பெற்றோரின் தரித்திர நிலைமைக்கும் மீறி அவனின் கல்லூரி வாழ்க்கை இதுவரை தட்டுத் தடுமாறி முன்னேறிக் கொண்டிருந்தது ஏதோ புண்ணியமாகவே பட்டது அவனுக்குள். ஸ்காலர்ஷிப் பணத்திலும், அவ்வப்போது அய்யாவும் அம்மாவும் கடன் வாங்கித் தந்தப் பணத்திலும் இதுவரை பட்டப்படிப்பை ஓட்டியாயிற்று. இன்னும் ஒரு வருஷம். இந்த ஒரு வருஷம் முடிந்ததும் ஒரு பட்டதாரி அவன். 'சிவராஜன் பி.ஏ..' என்று அவனின் நாமத்திற்குக் கிரீடம் சூட்டிக் கொள்ளும் பெருமையிருந்தது அவனின் மனசுக்குள். அப்புறம் ஒரு ஆபீசில் குமாஸ்தா உத்தியோகம். அப்போது அய்யா இப்படி கஷ்டப்பட வேண்டி இருக்காது என்றும் நினைப்போடிற்று அவனுக்கு.

''டேய்... அப்பா நின்னுக்கிட்டே இருக்கார்டா. ரூமுக்குக் கூட்டிக் கொண்டு போடா...''

மற்ற சகாக்கள் முன் மொழிய அய்யாவை விடுதி அறைக்குள் அழைத்துக் கொண்டு போனான் சிவராஜன். ''வாங்கப்பா...''

நான்கு பேர் தங்கியிருக்கும் அறை. கசாமுசாவென்று துணிகளும் புத்தகங்களும் சிதறிக் கிடந்தன. திரையுலக ஹீரோ ஹீரோயின்களின் படங்கள் அஷ்ட கோணங்களில் சுவர்களிலும் கதவுகளிலும் ஒட்டப் பட்டிருந்தன.

பொருட்களையெல்லாம் ஒழித்து வைத்து விட்டு அய்யா உட்கார ஸ்டூல்

அமிமானி

எடுத்துப் போட்டான் சிவராஜன். ஆனால் அவர் அதை லட்சியம் பண்ணாமல் தரையி லேயே உட்கார்ந்து விட்டார்.

''நீங்க மணியார்டர்ல அனுப்பிவைக்க வேண்டியதுதானப்பா... மெனக்கெட்டு இவ்வளவு கஷ்டப்பட்டு நீங்களே ஏன் வரணும்?''

''அதுக்கில்ல.. மணியாடருல அதுல இதுலன்னு அனுப்பி வச்சா தாமசம் ஆயிருமென்னு ஒங்க அம்மைதான்ல சொன்னா... அதான் ஓடியாந்தேன்...''

அய்யாவின் வார்த்தைகளில் கிராம நெடி இழையோடியதைக் கேட்க சற்று உறுத் தலாயிருந்தது சிவராஜனுக்கு. மற்ற மாண வர்கள் எல்லோரும் பவ்யமாய், பச்சாதாப மாய் அய்யாவின் வார்த்தைகளில் செவி மடுத்து நின்று கொண்டிருக்க, சிவராஜ னுக்கு மட்டும் அதைக் கேட்பது அனாவசிய மாய்ப் பட்டது. எல்லோரும் அவர்மேல் இரக்கப்படும் படி அவர் ஏன் இங்கு வந்தி ருக்க வேண்டுமென்றும் நினைப்போடிற்று. அநேகமாய் அந்த ரூமிலுள்ள மாணவர் களின் அப்பாக்கள் அங்கே பிரசன்னம் தந்தி ருக்கிறார்கள் என்றாலும் இவரைப் போல அப்பாவியாய், பரிதாப ரூபியாய் யாரும் வந்திருக்கவில்லை என்பதை நினைத்துப் பார்த்தபோது, சற்று நெருடலாகவும் இருந் தது.

கிழிந்த கந்தலாய் அய்யாவின் கோலம் வேறு சிவராஜனைக் கலவரப் படுத்திக் கொண்டிருந்தது. நைந்து ஓட்டை விழுந்த அழுக்கான நாலுமுழ வேட்டியை அவர் அரையில் கட்டியிருந்த கிராமத்தனம், அறைக்குள் ஒளிர்ந்த டியூப்லைட் வெளிச் சத்தில் அட்சரசுத்தமாய்த் தெரிந்தது. தரையில் உட்கார்ந்திருந்த அவர் கால் பாதங்களில் அப்பியிருந்த செம்மண் புழுதி அறையின் தரையில் திட்டுத் திட்டாகப் பரவியிருந்தது. மேலுக்குச் சட்டை இடை யாது. உழைத்துக் களைத்துப் போயிருந்த தன் அடையாளமாய்ச் சதை தேய்ந்து, எலும்புகள் துருத்தி நின்றிருந்த கறுத்த மேனி. முகத் தாடைகளில் ஒரு வாரத்திற் குரிய மயிர்கள் புற்களாய்த் தளிர்த்திருந்தன. உதடுகள். வெற்றிலைச் சிவப்பில் காய்ந்து வெடித்திருந்தன. அவர் அடிக்கடி வாய் திறந்து பேசும்போதெல்லாம் கறை படிந்த பற்கள் சரளைக் கற்களாய் மின்னின. எண் ணெய்க்காகத் தவமிருந்த தலைக் கேசம். தோளில் நீளவாட்டில் போட்டிருந்த துண்டில் கூட வாழைக் கறையும் வெற்றி லைக் கறையும் பளிச்சிட்டன.

நேரே வேலையிலிருந்து திரும்பி வந்தி ருப்பார் போல என்றே நினைத்துக் கொண்டான் சிவராஜன். இவருக்குக் காட் டுக்கு வேலைக்குப் போவதும் கல்லூரி விடுதிக்கு வருவதும் ஒன்றாகவே படுகிறது என்றும் நினைத்துக் கொள்ள முடிந்தது. இதுதான் ஒரு கிராமவாசியின் மன நிலையோ என்றும் அவன் ஊகித்தான்.

''இந்தல... இதில நீ கேட்டிருந்த ரூவா இருக்கு....''

ம டி ய வி ழ் த் து ப் பொட்டலமாய்ப் பொதிந்து வைத்திருந்த பணக் கற்றைகளை எடுத்து அவனிடம் நீட்டினார் அய்யா.

பணத்தை வாங்கியபோது அவரின் முரட்டுக் கரம் அவனின் மெல்லிய கரங் களை அழுத்தியது போல உணர்ந்தான் அவன். அவனுக்குப் புரியாததா என்ன.... அந்தக் காய்ப்பேறிய கரங்களின் கடாட்சத் தால்தான் அவனின் கல்லூரி வாழ்க்கையே தடம் புரளாமல் ஓடுகிறது என்பது... அவர் அழுக்காகவும் அசடாகவும் இருப்பதால் தான் அவனால் சுத்தமாகவும் சொகுசாகவும் இருக்க முடிகிறது என்பது. மனம் சோம்பிக் கொண்டான்.

'டய்ங் டய்ங் டய்ங் டய்ங்....'

இரவுப் போஜனத்திற்கான 'பெல்' அடித்ததும் மற்ற மாணவர்கள் மெஸ் ஸுக்குக் கிளம்பத் தயாரானார்கள்.

''வாங்கப்பா... நீங்களும் சாப்பி டுங்க... கெஸ்ட் டிக்கட் வாங்கறேன்....''

ஆட்டு மந்தைகளாய்க்கூடி நின்றிருந்த மாணவர்கள் சிவராஜனின் அய்யாவைக் கண்டதும் ரொம்பவும் தாட்சண்யமாய் விலகிப் போய் வழி விட்டனர்.

பெஞ்சின் மேற்கு ஓரத்தில் அய்யாவை உட்கார வைத்துச் சாப்பாடு வாங்கித் தந்தான் அவன். எதிரிலும் பக்கவாட்டிலு மாக உட்கார்ந்திருந்த மாணவர்கள் அய்யாவை இரக்கத்தோடு பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது சிவராஜனுக்கு.

சூடாய் அனல் தகித்த சாதத்தை இதழ் குவித்து ஊதிக் கொடுத்தார் அய்யா. எல் லோரையும் போல அல்லாமல் மூன்று கரண்டி சாம்பார் வாங்கித் 'தபதப' என்று குழைத்துக் கொண்டார். நைசாய் நறுவிசாய் அள்ளி அள்ளித் தின்னாமல் சாதத்தைக் கவளம் கவளமாய் உருட்டி உருட்டி வாய்க் குள் வீசிச் சாப்பிட்டார். பக்கத்தில் வைத் திருந்த காரட் பொரியலைக் கூட சோற்றுக் குள் பிசைந்து கொண்டார். சாம்பாரும் பொரியலும் அவருக்கு ஒன்றாகவே பட்டி ருந்ததில் ஆச்சரியமில்லையென்று பட்டது சிவராஜனுக்கு. ரசம் வாங்கிக் கொள்ள வில்லை. மோர் வாங்கிக் கொள்ளவில்லை. மீதி சாதத்துக்கும் சாம்பாரே வாங்கிக் கொண்டு குழைத்துச் சாப்பிட்டார்.

இதெல்லாம் தொட்டில் பழக்கமென்று பட்டது சிவராஜனுக்கு. அவருக்குத் தெரிந்த அறிவில் அவர் செய்வதே சரியானதாகவும் சந்தோஷமானதாகவும் தோன்றியிருக்க வேண்டும். மனசுக்குள் அட்டை ஊர்வது போலக் கொஞ்சம் அருவருப்பாகத்தான் பட்டது அவனுக்கு.



கை கழுவி விட்டு, அறைக்குள் வந்து, மடிக்குள்ளிருந்த வெற்றிலைப் பொட்டலத்தை அவிழ்த்து சுவாரஸ்யமாக வெற்றிலை போட்டுக் கொண்டு அவர் விடை பெறும்போது ஒன்பது மணி ஆகியிருந்தது.

''இப்ப வண்டி இருக்காப்பா... போயிருவீங்களா?''

''இதென்னல பெரிய பிரமாதம்? மருதைக்கு வழி வாயிலதானல....''

கபடமின்றிச் சிரித்துக் கொண்டார் அய்யா. ஏதோ ராஜ பதவி கிடைத்திருந்த சந்தோஷம் அவருக்குள்.

''அப்போ எல்லோரும் இருக்கியளா... நா போயிட்டு வர்றேன்....''

சௌஜன்யமாய் எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு அறையை விட்டு வெளியே வந்தார் அய்யா.

''சிவராசு... இங்க வால....'' என்று ரகசியமாய் மகனைக் கூப்பிட்டார். பின்னாலே வந்து நின்ற சிவராஜன், ''என்னப்பா....'' என்றான்.

''எல... இங்க எல்லாம் எனக்குப் புடிச்சிருக்கு. நீ என்னைய அப்பான்னு கூப்பிடுறதுதான் புடிக்கல... ஏமில அய்யான்னே கூப்பிட வேண்டியதுதானே? அப்பான்னு கூப்புடுறது ஏதோ என்னையவிட்டு நீ தூரமாப் பிரிஞ்சி போனமாதிரி தெரியுது! சரில... நா வார்றேன்....'' - அய்யா வழி பார்த்துப் போய்க் கொண்டிருந்தார்.

முகத்தில் அறைந்ததுபோல் இருந்தது சிவராஜனுக்கு. அவன் நினைத்துக் கொண்டிருந்ததையே அவரும் சொல்லி விட்டார் என்று பட்டது.

அய்யாவுக்கும் கொஞ்சம் விற்பன்னம் இருப்பதில் அவனுக்குச் சந்தோஷமாயிருந்தது. ''அய்யா...!'' என்று தனிமையில் சப்தமாய்க் கூப்பிட்டுக் கொண்டான்.

# கம்ப்யூட்டர் கிராமம்

## 7

ஷண்பேகர், ''எனக்கென்னவோ கிராமத்தார் எவரும் மரத்தை வெட்ட ஒப்புக் கொள்ள மாட்டார்கள் என்று தோன்று கிறது. யாராவது வேற்று மதத்தைச் சேர்ந்த வர்கள் இருந்தால் கூப்பிடச் சொல்லு. இந்த மரத்துக்குள் இருப்பது இந்துக் கடவுள் தானே!'' என்றான்.

''ஏம்பா இந்த முனீஸ்வரன்கறது யாரு? சிவபெருமானுக்கு ஏதாவது உறவா?''

''தங்கச்சி மவனுங்க.''

''லே எடக்காக் கேக்குதாரு. அவருக்குப் போய்ப் பதில் சொல்லிக்கிட்டு'' என்று பூசாரி அவனைத் தடுத்து நிறுத்த, ''சொல் லுங்க பூசாரி ஏதாவது வழி சொல்லுங்க'' என்றான் மனோஜ்.

''ஒரே வழிதாங்க, பிசினை அந்தால தள்ளி வெக்கறது.''

''அது முடியாதுங்க.''

''இதுவும் முடியாது.''

''பம்பாயைக் கேட்கலாம்'' என்றான் ஷண்பேகர்.

இருவரும் உள்ளே சென்று ஓர் அறை யில் கூடிப் பேசினார்கள். ''இந்த ப்ராப்ளம் சைட் செலக்ஷன் செய்தவன் பிரச்னை. இது நம் தலையில் வந்து விடிந்திருக்கிறது பார். முதலில் ஆர்டர் வயர் மூலம் பம்பாயைக் கூப்பிடு'' என்றான்.

விஸாட் மூலம் கிடைத்த தொடர்பின் வழியாகவே மனோஜ் தன் உயர் அதிகாரி யைக் கூப்பிட்டான்.

''என்ன மனோஜ்?''

''ஸார் ஒரு ப்ராப்ளம்.''

''என்ன?''

''சைட்டில் மாமரம் இருக்கிறது. அதை வெட்ட மறுக்கிறார்கள்.''

''யார்?''

''கிராமத்தவர்கள்.''

''கிராமத்தவர்களை எதற்குக் கேட்கி

**சுஜாதா**



நாய், நீயே வெட்டிட வேண்டியதுதானே?''

''எப்படி?''

''இன்ஸ்டலேஷன் மெட்டிரியலில் ஓர் அருமையான உல்ஃப் கம்பெனியின் 'எலக்ட்ரிக் ஸா' இருக்கிறது, அதை உப யோகித்து. நீ என்ன இன்னும் சைட் பற்றியே பேசிக் கொண்டிருக்கிறாயே! ஆன்டென்னா இன்ஸ்டலேஷன் ஆரம்பிக்க வேண்டாம்?'' என்றார்.

''சரி ஸார்'' என்றான் முகத்தில் ஏமாற் றத்துடன்.

''அவரைக் கேட்டால் மரத்தை வெட்டாதே என்று சொல்வார் என்று எதிர் பார்த்தாயா?''

''ஆம். முட்டாள் நான்'' என்றான் ஷண்பேகர்.

''இந்தப் பிரச்னையை நாமேதான் தீர்க்க வேண்டும். வாசுதேவன் நாயர் என்ன சொல்கிறார்?''

''புறப்பட்டுப் போய் விட்டார். சிவ சங்கரன் போயாச்சு. வாசுதேவன் போயாச்சு.''

''எல்லோரும் நம் மடியில் பிரச் னையைப் போட்டு விட்டார்கள். டிஸியைப்



பார்க்கலாமா?'' என்றான்.

ஷண்பேகர் ''கமிஷன் பண்ணுவதற்கு முன், மெஷர்மெண்ட் எடுப்பதற்கு முன் தான் மரத்தை வெட்ட வேண்டி வரும். அதனால் அதற்கு இப்போது அவசியமில்லை. கிராமத்துக்காரர்களே ஒரு காம்ப்ரமைஸ்க்கு வருவார்கள். எட்டு நாள் கொடுத்துப் பார்க்கலாம்.''

பிரச்னை தாற்காலிகமாக ஒத்திப் போட்டு விட்டதில் சற்றே திருப்தியடைந்து மனோஜ் அறையை விட்டு வெளியே வந்தான்.

''பூசாரி எட்டு நாளைக்குள்ள சொல்லுங்க. வேற வழி சொல்லுங்க.''

''எட்டு நாள் கழிச்சும் ஒரே வழிதாங்க இருக்கறது.''

''யோசிச்சுப் பாருங்க. இந்த கிராமத்துக்கு இந்த மிசின் வெக்கறதால எத்தனை லாபம் தெரியுமா?''

''இந்தக் கிராமத்துக்கு இந்த மரத்தை வெட்டறதால எத்தனை நஸ்டம் தெரியுமா?''

''அதுக்குத்தான் க்ம்பன்ஸேஷன் பணம் கொடுத்துர்றனே!''

''எத்தனை தருவீங்க?''

''ஆயிரம் ரூபா வேணாத் தர்றோம்.''

''திருவிளாவில லட்சக்கணக்கா வருலாகுமே'' என்றான்.

''திருவிளாவெல்லாம் யார் வேண்டாம்னாங்க. முனீஸ்வரனை பாதைக்கு அப்பால மாத்தத்தானே சொல்றேன்.''

''என்னங்க அவரு கடவுள். நாம இஸ்டப்பட்டு மாத்த முடியுங்களா?''

''ஹி எக்ஸ்பெக்ட்ஸ் மணி'' என்றான் மனோஜ்.

''இல்லைங்க எனக்குப் பணம் வேண்டாங்க'' என்றான். ''எனக்கு இங்கிலிசு புரியும். நான் திருவள்ளுவர்ல கிளார்க்கா இருந்து முனீஸ்வரன் கூப்ட்டதால வேலையை விட்டு வெளிய வந்தவனுங்க'' என்றான்.

''சரி எட்டு நாளைக்குள்ள முடிவைச் சொல்லுங்க'' என்று அவர்களை அனுப்பி வைத்தான்.

இதற்குள் ஷண்பேகர் முப்பது நாள் தமிழிலிருந்து, ப தி ன ா ன் கு வயசுப் பெண்ணை, ''ஒம் பேர் என்ன?'' என்று கேட்டுக் கொண்டிருக்க, அவள் பதுங்கினாள்.

''கத்தரிக்காய், வெண்டைக்காய்'' என்றான். அவள் சிரித்தாள். ஷண்பேகர் தன் கம்ப்யூட்டர் பாக்ஸ்களைத் திறந்து, மெல்ல ஸிஸ்டம் இன்ஸ்டலேஷனைத் துவக்கினான்.

அந்தப் பெண்ணை உதவிக்கு வைத்து விட்டான். அவள் டெர்மினலை அவனுடன் சேர்ந்து தூக்குவதை மனோஜ் கவலையுடன் பார்த்தான்.

''ஏ ஷண், பி கேர்ஃபுல். நோ டச்'' என்றான். ''எப்படி இருக்கிறது?''

''ஸுப்பர். ஃபங்ஷன் கால்ஸ் அத்தனையும் லோடு பண்ணியாகி விட்டது. செக் ருட்டினை ரன் பண்ணி விட்டால் நான் தயார்.''

மனோ சுற்றிலும் பார்த்தான். பெட்டியின் மேல் ப்ளாஸ்டிக் பரப்பி பெஞ்ச் வைவலை திருகி வைத்துக் கொண்டான்.

எர்த்துக்காக உப்பும் கரியும் வாங்க ஆரம்பாக்கத்துக்கு ஆள் அனுப்பினான்.

டிபன் பாக்ஸ் கொண்டு வந்த ஜீப்பில் ப்ரமிளாவும் டிஸியின் மனைவியும் வந்தார்கள்.

ஷண்பேகர் எட்டு இட்லி சாப்பிட்டான். இவன் சம்பிரமமாக உட்கார்ந்து, ''சாம்பார் மணக்குதே'' என்றான்.

ப்ரமிளா, ''எங்கே முனீஸ்வரன்?'' என்று டிஸியின் மனைவியைக் கேட்க, அவள் ''அதோ பார் அந்த மரம்தான்'' என்றாள்.

''நீங்க பார்த்திருக்கீங்களா?''

''எத்தனையோ தடவை.''

''என்னத்தை?'' என்றான் மனோஜ்.

''முனீஸ்வரனை ப்ரத்யட்சமா. இவருக்கு வேண்டிண்டப்புறம் தான் நாணா பிறந்தான்.

''இந்த மரத்தை வெட்டப் போகிறோம்'' என்றான் ஷண்பேகர். அவள் ''என்னது?'' என்றாள்.

''ஆமாம். மரத்தை வெட்டாட்டா இங்கே ஏதும் நிறுவ முடியாது.''

''அய்யோ'' என்றாள் கலவரத்துடன்.

''முனீஸ்வரன் சம்மதிச்சுட்டாரா?''

''பார்த்தால் கேட்கலாம்'' என்றான் ஷண்பேகர்.

''ப்ரமிளா நாம் போகலாம். எனக்குப் படபடன்னு வரது'' என்றாள்.

அவர்கள் போன பின் ''இந்த முனீஸ் இந்தக் கிராமத்தின் மனநிலையை ரொம்ப பாதித்திருக்கிறார் போல இருக்கிறது. மரத்தை வெட்டி மாட்டிக் கொள்ளப் போகிறோம்.''

மனோஜ் எரிச்சலுடன் ''ஷில்வி. நீயும் நம்ப ஆரம்பிக்காதே'' என்றான். ''இர



''கண்ணீர் வடிக்கிறீங்களே, அந்த அளவுக்கா சார் கதை இருந்திச்சு?''

''அட, யார் சார் கதையைப் படிச்சாங்க.... நான் 'ஜோக்'கைப் படிச்சிட்டுல்ல அழறேன்!''

- சீகாழி. வி. ரேவதி.

வோடு இரவாக மரத்தை வெட்டி விடலாம். தாமதம் வேண்டாம். கொஞ்ச நாள் காத்திருந்தால் மேலும் கதைகள் உற்பத்தியாகிப் பிள்ளை பெறாதவர்கள் எல்லாரும் வாசலில் வந்து ஸ்ட்ரைக் பண்ணத் துவங்கி விடுவார்கள்.''

''மனோஜ், எனக்கு என்னவோ பதற்றமாக இருக்கிறது.''

இன்ஸ்டலேஷன் மெட்டிரியலில் இருந்த பவர் ஸா என்னும் பல் சக்கரத்தை எடுத்துப் பரிசோதித்துப் பார்த்தான் மனோஜ். அது விர்ர்ர் என்று சீறியது.

''இரவில் வந்து விடலாம். முதலில் ஜெனரேட்டரைத் திறக்கிறேன்.''

பெட்ரோலில் ஓடும் அந்த அடக்கமான ஜெனரேட்டர் ஏறத்தாழ பத்து கேவிஏ தந்தது. இங்கிருந்து மரம் வரை கேபிள் எக்ஸ்டெண்டர் போட்டு விடலாம் என்று யோசித்து இன்னிக்கு என்ன கிழமை? வெள்ளி. திங்கட் கிழமை வெட்டி விடலாம் என்று தீர்மானித்தான்.

பின்கட்டில் சென்ற போது ஷண்பேகர் அந்த இளம் பெண்ணுக்கு ஏ.பி.ஸி.டி. சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான். டிபார்ட்மெண்ட் நோட் புத்தகத்தில் வெள்ளை வெளேர் காகிதத்தை விரயம் பண்ணிப் பெரிசாக ஏ போட்டிருந்தான்.

அந்தப் பெண்ணை முதலாக மனோஜ் கிட்டத்தில் கவனித்தான். அரும்பாகச் செம்பட்டை மயிர் உதட்டில் மெலிசாகத் தெரியப் புருவங்கள் சேர்ந்து இளமையின் ஆரம்ப அடையாளங்கள் உடம்பில் காண, கரேல் என்று முகமும் அழுக்குச் சட்டையுமாக இருந்தாள். ஷண்பேகர் அவளுக்குப் பனியன் கொடுத்தான். அதை வாங்கிக் கொண்டு ஓட்டமாக ஓடி, முனீஸ்வரன் மரத்தருகில் சென்று பொட்டு இட்டுக் கொண்டு ஓடினாள்.

''ஷண், உன்கிட்டே ஒன்று சொல்லியே ஆக வேண்டும். தமிழ்நாட்டு கிராமங்களைப் பற்றி...''

''பெண்களிடம் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அதானே? இங்கிலீஷ் கற்றுக் கொடுப்பது தப்பா?''

''இங்கிலீஷுடன் நின்று விட்டால் சரி'' என்றான்.

ஷண்பேகர் ''டோண்ட் ஒர்ரி. மரத்தை வெட்டு முதலில். மற்றதெல்லாம் அப்புறம் பார்த்துக் கொள்கிறேன்.''

சாயங்காலம் ஒட்டுமொத்தமாக பாக்கிங் லிஸ்ட்படி எல்லாச் சாமான்களும் வந்து சேர்ந்திருப்பதைச் சரிபார்த்து விட்டுப் பூட்டிக் கொண்டு புறப்பட்ட போது, ஐந்து மணியாகி விட்டது. அந்த மரத்தைக் கடக்கும் போது, அதன் வேர்கள் நரம்பு போலவும் சொர சொரத்த முகத்துடன் அதன்



''நம்ம பங்கஜம் மாமிக்கு லாட்டரியில ஒரு கோடி ரூபா விழுந்திருக்கலாம், அதுக்காக ஹெலிகாப்டர்ல பறந்த மேனிக்கு மொட்டை மாடியில் வத்தல் பிழியறது கொஞ்சம் ஓவர்தான்!''

– கோ. முத்துச்செல்வன்.

பொந்துக் கண்கள் தன்னைப் பார்ப்பது போலவும் உணர்ந்தான்.

''சே, டோண்ட் பீ ஸில்லி'' என்று தன்னை மண்டையில் தட்டிக் கொண்டான்.

டீஸி வீட்டில் இரவுச் சாப்பாடு ஏற்பாடு பண்ணியிருந்தார்கள். ப்ரமிளா வீட்டு மனுஷி போலவே புழங்கிக் கொண்டு தம்ளர் டபரா எடுத்துக் கொடுத்தாள்.

கை அலம்பும் போது, ''ராத்திரி தங்க வந்துரு!'' என்றான் மனோஜ்.

''எங்கே?''

''ஓட்டலுக்கு.''

''ம், கொன்னுடுவா.''

''பின்னே என்ன பண்றதா உத்தேசம்?''

''நீங்க இங்கே படுத்துக்கங்களேன்.''

டோட்டு அவனைப் பார்த்து அளவிலா உற்சாகத்தில் வாலை வீசி ஆட்டியது.

''டோட்டுவுக்குப் பாப்பாவைப் பிடித்துப் போய் விட்டது.''

ஷண்பேகர் 'முப்பது நாட்களில் தமிழ்' படித்துக் கொண்டிருந்தான்.

''லவ் என்பதற்கு வார்த்தையே இல்லை. எல்லாக் காய்கறிகளும் கை கால் உடம்புடன் அத்தனை பாகமும் இருக்கிறது'' என்றான்.

''லவ் என்றால் காதல்'' என்றாள் ப்ரமிளா.

ஷண் ராத்திரி கொய்யாப்பழம் சாப்பிட்டு விட்டு, ப்ரதான் வீட்டில் தூங்கப் போவதாகச் சொன்னான்.

''பக்கத்தில பட்டைச் சாராயம் விற்கும் கடை இருக்கிறதா?''

''வெள்ளிக்குப்பம் எல்லையில் இருக்கிறது. உன் நண்பன் அங்கெல்லாம் போவது சரியில்லை. பாஷையும் தெரியாது.''

ஷண்பேகர், ''தெரியும், ஒன்னு ரண்டு'' என்றான்.

மனோஜ், ஓட்டலுக்குப் போய் பைஜாமாவுக்கு மாற்றிக் கொண்டு படுத்த பின், பின்னிரவு அழுகைக் குரல் அவனை எழுப்பியது.

(தொடரும்)

# கல்யாணத்திற்குப் பிறகு

திடீரென்று நடராஜன் போன் செய்தான். எதிர்பாராத செய்தியைச் சொன்னான்.

''வெங்கிட்டு... நேத்திக்கு உன் ஆளைப் பார்த்தேண்டா...!''

''என் ஆளா... என்ன உளர்றே?'' முதலில் ஒன்றும் புரியவில்லை.

''சாருமதி.... சண்முகம் வாத்தியார் மக.....''

உள்ளே பளிச்சென்று விளக்கு எரிந்தது.

''நிஜமா நட்டு?''

ஆபீஸ் என்பதையும் மறந்து குரல் அதிர்ந்தது. மனசுக்குள் குப்பென்று பரவிய பரவசம். தவறிப் போன குழந்தை கிடைத்த சந்தோஷம். துக்கம் தொண்டையில் இடறும் நெகிழ்ச்சி....

''எ கிரேட் சர்ப்ரைஸ்! நேத்திக்கு பிரண்டு ஒருத்தனைப் பார்க்க அக்ரி போயிருந்தேன். உள்ளே வான்னு கூட்டிட்டுப் போயி வேண்டியவங்களை அறிமுகப்படுத்தினான். இவங்கதான் செக்ஷன் ஆபீசர்னு காட்டின பெண்மணியைப் பார்த்ததும் அசந்து போயிட்டேன். நம்ம சாரு.....''

நடராஜன் விஸ்தாரமாகச் சொல்ல மனசு நடுங்கியது. வெங்கிட்டு கண்களை மூடிக் கொண்டான்.

''நீயும் இங்கதான் இருக்கேன்னு சொன்னேன். ஷி வாஸ் வெரி ஹேப்பி. அவசியம் பார்க்கணுமாம். விலாசம் குடுத்திருக்கா. போய்ட்டு வாடா....''

''ம்.......''

''என்ன உம்?''

''சரி....''

''எப்பன்னு சொல்லு. நான் போன் பண்ணி அவளுக்குச் சொல்லணும்....''

''யோசிக்கச் சொல்றேன்.''

''யோசனைக்கு என்ன கெடக்கு... முடிஞ்சு போன கதை......''

''அதான் யோசிக்க வேண்டிய விஷயம்....'' வெங்கிட்டு சிரிக்க முயன்றான். ''நான் மறுபடியும் காண்டாக்ட் பண்றேன்....''

வெங்கிட்டு சட்டென்று போனை வைத்தான். சுற்றிலும் பார்த்து விட்டு கர்சீப்பால் முகத்தைத் துடைத்துக் கொண்டான்.

தன் இருக்கைக்கு வந்து அமரும் போது டிரெஸர் போட்ட சிறுவனாகி இருந்தான்.

மூவருக்கும் ஒரே ஊர். ஒரே தெரு. சேர்ந்து விளையாடியவர்கள். சண்டை போட்டவர்கள். திண்ணையில் உட்கார்ந்து காமாட்சிப் பாட்டியிடம் கதை கேட்டவர்கள்.

சாருமதி அம்மாவின் வழியில் தூரத்துச் சொந்தம். சாப்பாடு தூக்கம் தவிர மற்ற நேரங்களில் வெங்கிட்டுவின் வீட்டில்தான் ஜாகை. ''ஏண்டி.... எம் பையனையே சுத்திகிட்டு வர்றே. மயக்கிக் கட்டிக்கலாம்னு பாக்கிறியா?''

''அய்யே... இவனை ஆரு கட்டிப்பா?''

''ஏண்டி...?''

''கருப்பு... நல்லாவே இல்லை....''

''அடிப்பாவி....!'' அம்மா மாய்ந்து போவாள். ''பாரு.... இத்தினியூண்டு இருந்துக்கிட்டு என்ன பேச்சுன்னு....''

''வெங்கிட்டு... வானத்துல எத்தனை நட்சத்திரம்னு எண்ணுவியாடா?''

''ம்ஹூம்...''

''சொன்னேனா பத்துப் பைசாத் தருவேன்.''

அந்தப் பருவத்தில் பத்துப் பைசா மலை. கெஞ்சாமல் கிடைக்கிற காசு! கடலை உருண்டைக்கும், இலந்தை வடைக்கும் போதுமான தொகை.

''சரி....''

அண்ணாந்து ''ஒண்ணு... ரெண்டு....'' என்று எண்ணும்போது அடிவயிற்றில் கும்மென்று குத்து.

''ஹா... ஹா...'' எனச் சிரித்துக் கொண்டே ஓடுவாள். ''இதான் நம்ம வேலை. தெரிஞ்சுக்கிட்டியாடா....''

குறும்புத்தனம். விளையாட்டு. உலகம் புரியப் புரிய துளிர்க்கும் கேள்விகள்....

வளர்ந்த பிறகும் அவளது சுபாவம் மாறவில்லை.

நிமிர்ந்த நன்னடை. நேர் கொண்ட பார்வை. படபடவென்று பொரியும் வார்த்தைகள். பந்தயக் குதிரை மாதிரி......

பஸ்ஸில் தன் மீது உரசியவனுக்குச் செருப்பைத் தூக்கிக் காட்டியிருக்கிறாள்.

தெருவில் அவளைக் கண்டால் பயம். குறிப்பாக இளவட்டங்களுக்கு. ''மச்சி... மெஷின் கன் வருதுடோய்....'' என ஒதுங்கிப் போவார்கள்.

வெங்கிட்டு மட்டும் வெல்லம். சந்திக்கும் போது மணிக்கணக்காகப் பேசுவாள்.

மும்தாஜ் யாசீன்



''என் சுபாவம் உனக்குத் தப்பாப் படுதா வெங்கிட்டு?''

''இல்லே... ஆனா....''

''பார்த்தியா....? பொய்....''

''ஏன் இப்படி படபடன்னு இருக்கே...?''

''தெரியலை... இதனால யாருக்கு என்ன கெடுதல்?''

''உனக்கு... உன் எதிர்காலத்துக்கு...''

''நான் பொண்ணு.... அதானே சொல்ல வர்றே....'' கலகலவென்று சிரித்தாள். திடீரென்று முகம் இறுகியது. ஆஞ்சநேயர் கோவில் மண்டபத்தில் இருவரும் எதிரெதிரே உட்கார்ந்திருந்தார்கள்.

எதையோ தேடுகிற மாதிரி வெறிக்கப் பார்த்தவள், சொன்னாள் : ''என்னைப் பொறுத்தவரைக்கும் ஆண், பெண் பேதம்ங்கிறது வெறும் பௌதிக வித்தியாசம் வெங்கிட்டு. காலங் காலமாய்க் காப்பாத்தப்பட்டு வரும் கற்பனை எல்லைக்கோடு. முயற்சி இருந்தா யாரும் முன்னேறலாம். நான் உனக்குச் சமமா விளையாடினதில்லையா? அதிக மார்க் வாங்கினது இல்லையா.... சொல்லு.''

வெங்கிட்டு பெருமூச்சு விட்டான்.

அச்சமயத்தில் அவளது வாழ்க்கை எவ்வளவோ மாறி இருந்தது.

பள்ளி இறுதிப் படிப்பை முடித்திருந்தாள்.

இருமலோடு போராடிய அப்பா சமீபத்தில் செத்துப் போயிருந்தார்.

அம்மாவும், இரண்டு தங்கைகளும் அவளது தலையில். இத்தனையையும் தாங்கியபடி உறுதி குலையாமல் இருந்தாள். குடும்பத்தைக் காப்பாற்றப் பொழுது போக்காகக் கற்றுக் கொண்ட தையல்தான் ஆதாரமாக இருந்தது.



''என் பையனுக்கு தேசபக்தி உணர்வு ரொம்ப ஜாஸ்தி.''
''எப்படிச் சொல்றீங்க?''
''ரேங்க் என்னடா வாங்கியிருக்கேன்னு கேட்டா, ஜனகணமன ரேங்குங்கிறான்!''
- பி. ஜி. பி. இசக்கி.

எவ்வளவோ உயரப் போக வேண்டியவளுக்கு விதிக்கப்பட்டிருப்பதை நினைத்து உள்ளூர வேதனை.

''இருக்கட்டும் வெங்கிட்டு... வாழ்க்கையை எதுல இருந்து ஆரம்பிக்கிறோம்கிறது முக்கியம் இல்லை. அதையும் சாதகமாகப் பயன்படுத்தி முன்னேற முடியும்னா அதுதான் சாமர்த்தியம். நம்ம வலிமை நம்ம கைகள்லதான் இருக்கு. பாரு ஜெயிச்சுக்காட்டறனா இல்லையான்னு....''

''ஏதாவது ஒரு கட்டத்துல நானும் உனக்குத் துணையா வருவேன் சாரு....''

''அப்படி அமையும்னா அதான் என் வாழ்க்கையில் பெரிய சந்தோஷம்.''

''உண்மையா?''

''சத்தியமா....''

அத்தருணத்தில் அவளது முகமும், கண்களும் பிரகாசித்தது, வெங்கிட்டுவுக்கு இன்னும் நன்றாக ஞாபகம் இருந்தது.

நன்கு வேரூன்றி வளர்ந்திருக்க வேண்டிய உறவு. அப்பாவின் முரட்டுத்தனத்தால் கருகிப் போயிற்று.

ஒருநாள் கடையைச் சாத்திவிட்டு சீக்கிரம் வீடு திரும்பியவர், அவனை எதிரில் கூப்பிட்டு நிறுத்தி, ''சாருமதியோட உனக்கு உள்ள உறவுக்கு என்னடா பெயர்?'' என்று கேட்டார்.

''பெயர்னா?'' வெங்கிட்டுவுக்கு உள்ளூர நடுங்கியது.

''கோயில்ல திருட்டுத்தனமாச் சந்திக்கிறவனுக்கு இது தெரியலையா?''

''அப்பா.... வந்து...''

''எல்லாம் எனக்குத் தெரியும். இது நல்லா இல்லை. அம்புட்டுத்தான்....''

''..........''

''இனிமே இந்த மாதிரி ஒரு செய்தி என் காதுக்கு வரப்படாது....''

''ம்.....''

''அதெல்லாம் அசுர ஜாதகம். அடங்கி நடக்க முடியாது. வீணா மாட்டிக்கிட்டு முழிக்காதே. இதைப் பத்தி இப்பச் சொல்றதுதான் கடைசி. இனி பேசற நிலைமை கெடையாது. கழுத்தைப் பிடிச்சு வெளியே தள்ளிடுவேன்.....''

வெங்கிட்டுவுக்கு வீதியில் நிற்க முடியாது. படிப்பு. எதிர்காலக்கனவு. டவுன்பஸ் ஸ்டாக்குச் சில்லறை. எல்லாவற்றுக்கும் மேலாக அம்மாவின் அழுகை....

யோசிக்க யோசிக்கச் சாருமதியின் தட்டு கீழே இறங்கியது.

மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, ''நம்ம சந்திப்பை அப்பா விரும்பலை'' என ஒரு துண்டுச் சீட்டில் எழுதி அனுப்பினான்.

உடைந்து போவாள்; பாவி சண்டாளா என சபிக்கப் போகிறாள் என்று நினைத்ததற்கு மாறாக, தானும் ஒரு துண்டுச் சீட்டை பதிலுக்கு அனுப்பினாள். ''பிரியறதைக்கூட நேரில் நாகரிகமாகத் தெரிவிக்க முடியும்..... வெங்கிட்டு. குட்பை!'' என எழுதியிருந்தாள்.

அவனுக்கு அதிர்ச்சியாக இருந்தது. ஒரு பெண்ணுக்கு இவ்வளவு நெஞ்சழுத்தமா? அசுர ஜாதகம் என்ற அப்பாவின் வர்ணனைக்கு உருவம் அளித்த மாதிரி....

தன் வார்த்தைகளை உறுதிப் படுத்துவதைப் போல, இரண்டாவது மாதமே கல்யாணம் பண்ணிக் கொண்டாள். மாமாவின் பையன், அழகோ, படிப்போ இல்லாத சாதாரண மாப்பிள்ளை. பட்டினத்தில் ஏதோ ஒரு சின்ன உத்தியோகத்தில் இருந்தான். கொஞ்ச நாளில் குடும்பமே சென்னைக்குக் குடிபோய் விட்டது.

கிட்டத்தட்ட பூஜ்யத்திலிருந்து துவங்கப்போகிற வாழ்க்கை. கனவுகளும், தையல் மிஷினும் மட்டுமே மூலதனமாய்... எப்படிப் பிழைக்கப் போகிறாள்?

முன்பெல்லாம் அடிக்கடி நினைத்துக் கொள்வான்.

படித்து முடித்து, வேலைக்கு அலைந்து, அரசாங்கத்தின் ஒரு துறையில் குமாஸ்தாவாகச் சேர்ந்து, வத்சலாவைக் கைப் பிடித்து, உதிக்கிற எல்லா நாட்களையும் குடும்ப உறவுகள் முழுமையாகக் கைப்பற்றிக் கொண்ட பிறகு - சாருமதி காணாமல் போனாள்.

சென்னைக்கு அவனும் மாற்றலாகி வந்து இரண்டு வருடம் ஆகிறது. நடராஜன் தேடிப் பிடித்துக் கொடுத்திருக்கிறான் சாருமதியை....!

கடவுளே!

''வெங்கிட்டு பசிக்கலையா?'' பாஸ்கரன் - ஆபீஸ் சிநேகிதன் - டிபன் பாக்ஸோடு எழுந்து போனான். இவன் மனம் தராசாகி எடை போட்டுக் கொண்டிருந்தது.

காலையில் வத்சலாவுடன் சிறு

பிணக்கு.

டிபன் சாப்பிடும் போது, ''இப்ப எதுக்கு உங்கப்பா வர்றாராம்?'' எனக் கேட்டாள். அதென்னவோ அவனைச் சார்ந்த யாரையும் அவளுக்குப் பிடிக்கிறதில்லை.

''உன் கையால் சாப்பிட்டு நாளாச்சுல்ல... அதான்....'' என்றான் வெங்கிட்டு.

''ஏன்.... நான் போட்டதே இல்லையா?'' வத்சலா.

''ஆமா.... ஆமா... நெறைய....''

''என்ன செஞ்சாலும் நன்றி கெடையாது இந்த வீட்ல....''

''என்னத்தடி உங்கொப்பன் வீட்ல இருந்து கொண்டு வந்து போட்டுட்டே.... நன்றின்னுட்டு ....ம்?''

தட்டை விசிறியடித்தான். சாம்பாரோடு பறந்த இட்லிகள் சுவரைக் கறை படுத்திச் சிதறின.

யோசித்துப் பார்த்தால் பிரச்னைகளால் உண்டாகிற சண்டைகளல்ல. சண்டைக்காகத் தேடிக் கொள்ளும் பிரச்னைகள். வாழ்க்கை ஏன் இப்படி நரகமாய்...

சாப்பிட எழுந்த போது, ''ஸார்... போன்'' என்றான் கந்தசாமி.

''யாரு?''

''லேடி வாய்ஸ்... யாரோ சாருமதியாம்?''

**வீ**டு அமைதியாக இருந்தது. பெல் ஸ்விட்சை அழுத்தினான்.

''எஸ்... கமின்...'' படக்கென்று கதவைத் திறந்தாள்.

அவனைக் கண்டதும், ''வெங்கிட்டு.....'' எனக் கண்களை அகலத் திறந்தாள். பகைமை இன்றிப் பழைய சினேகிதத்துடன் தன்னைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டது அவனுக்குப் பிடித்தது.

காலம் உண்டாக்கியிருந்த சில மாற்றங்களைத் தவிர அதே சாருமதி. அதே கம்பீரம். கண்களை நேராகச் சந்திக்கும் பார்வை.

''உள்ளே வா வெங்கிட்டு....''

சோபாவைக் காட்டி உட்காரச் சொன்னாள். தன்னையும் இலகுவாக்கிக் கொண்டு வெங்கிட்டு அமர்ந்தான்.

வீடு உள்ளே இன்னும் பெரியதாகத் தெரிந்தது. ஹால், உள்ளறைகள், மாடி, டீ.வி, பிரிட்ஜ், வி.சி.பி.....

''சொன்ன மாதிரியே ஜெயிச்சுட்டே.... உன்னை இப்படிப் பார்க்கிறது ரொம்ப சந்தோஷமா இருக்கு சாரு.....'' என்றான்.

''ஜெயம்னு எதை நினைக்கிறே.....'' எனத் திருப்பிக் கேட்டாள்.

சொந்தமா வீடு. உத்தியோகம். பாதுகாப்பு வளையத்திற்குள் அமைத்துக் கொண்ட வாழ்க்கை. வேறு என்ன வேண்டும்?

---

சாருமதி அதற்கும் சிரித்தாள்.

''இரு. வந்துட்டேன்....'' உள்ளே போனாள்.

பலகாரத்துடன் திரும்பி வந்தாள்.

பேசவும் கேட்டுக் கொள்ளவும் இருவருக்குமே நிறைய இருந்தன.

''அவரு இல்லையா?''

''வர்றதுக்கு நேரமாகும்....''

நிறையக் கஷ்டப்பட்டிருந்தாள். முதலில். சின்னச்சின்ன வேலைகள். படிப்படியாய்த் திறமையை வளர்த்து, கொஞ்சம் கொஞ்சமாய் முன்னேறி....

இப்போதைய பதவி அவளது உழைப்பிற்குக் கிடைத்த வெற்றி.

''ஏதோ ஒரு வேகத்துல காலெடுத்து வச்சேன். எல்லாமே எதேச்சையா அமைஞ்சிட்டது'' என்றாள்.

''இல்லை சாருமதி.... உன் மன உறுதிக்குக் கிடைச்ச பலன் இதெல்லாம்'' என்றான் வெங்கிட்டு.

''என்னமோ போ. தேடறவரைக்கும் தான் எல்லாம். கிடைச்ச பிறகு ஒண்ணுமில்லை...''

''அப்ப... உன் இலக்கு இன்னும் தூரத்துல இருக்குன்னு அர்த்தம்.''

''உண்மையில் எனக்கு இப்ப இலக்குன்னு ஒண்ணு கெடையாது''. முகத்தில் அச்சமயத்தில் மெல்லிசாக ஒரு சுளிப்புத் தோன்றி மறைந்ததை வெங்கிட்டு கவனித்தான்.

குடும்பத்தைப் பற்றி விசாரித்தான்.

தங்கைகள் இருவரையும் படிக்க வைத்து, வேலையும் வாங்கி, கல்யாணமும் பண்ணிக் கொடுத்திருந்தாள். புருஷன் சின்னதாக ஒரு ஹோட்டல் வைத்து நடத்துகிறான். அம்மா இன்னும் அவளோடுதான். எல்லாம் சரியான திசையில்தான் போய்க் கொண்டிருக்கிறது.

பின் என்ன விரக்தி?

எழுந்து போய் காப்பி போட்டுக் கொண்டு வந்தவள், அவனிடம் தம்ளரை நீட்டியபடி, ''குழந்தைகள் எத்தனை?'' என்று கேட்டாள்.

''ரெண்டு.... உனக்கு?''

''பெரிய ஸீரோ.....'' சுவரில் தொங்கிய படத்தைப் பார்த்தாள். புருஷனும், அவளும் மட்டுமே.

''ஏன்... ஏதாச்சும்....''

''எல்லா டாக்டரையும் பார்த்தாச்சு. எனக்கு அந்த பாக்கியம் இல்லை.'' திடீரென அவன் திடுக்கிடும்படி, குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தாள்.

''சாருமதி.... ப்ளீஸ்... என்ன இது?''

வெங்கிட்டுவுக்கு என்ன என்று புரியவில்லை.

பெரிய பெரிய கடல்களையெல்லாம் தாண்டியவள், சிறிய குட்டையின் குறுக்கீட்டிற்காக உடைந்து போவாளா? சாருமதியா? மனித மன விசித்திரங்களில் இதுவும் ஒன்று போலும்! தானும் ஒரு பெண் என்று நிருபித்து விட்டாள்.

சட்டென்று நிமிர்ந்து பார்த்தவள், தன் செய்கைக்கு வெட்கப்பட்டவள் போல, ''ஐயாம் சாரி....'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே போனாள்.

எத்தனையோ பேரிடம் அவள் இதே கேள்வியை எதிர் கொண்டிருக்கக் கூடும். ஆனால் தன்னிடம் மட்டும் உடைந்து போவதென்றால்....

தன் சிநேகிதத்திற்கு அளிக்கப்பட்ட அங்கீகாரம் என்று அதை நினைக்க ஆனந்தமாக இருந்தது வெங்கிட்டுவுக்கு.

ஊருக்கு வரப் போகும் அப்பாவிடம் சொல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

''எல்லோருக்கு உள்ளேயும் அசுரனும், தேவனும் உண்டு. வெளிப்படும் சமயம் தான் வெவ்வேறு. சாருமதிக்குக் கல்யாணத்திற்கு முன். உங்கள் மருமகளுக்குக் கல்யாணத்துக்குப் பிறகு......''



''ஏன்டா மானேஜர் உன்னைப் பார்த்து இப்படி பயப்படறார்? அவருடைய ரகசியம் ஏதாவது உன்கிட்ட மாட்டிக்கிட்டிருக்கா?''

''ஆமாம்; போன வாரம் 'கிருஷ்ணா பவன்'ல நான் பில் கொடுக்க முடியாமல் மாவு ஆட்டினப்போ, அவரும் எதிர்ல மாவு ஆட்டிக்கிட்டிருந்ததைப் பார்த்துட்டேன்!''

- பி. ஆர். கே. தோ.

# ரீகல்

சொட்டு நீலம் வழங்கும் 1001 பரிசுகள்

வெள்ளி விழா போட்டி

ரீகல் சொட்டு நீலம் தயாரிப்பாளர்கள் உங்கள் ஆதரவினால் இப்பொழுது வெள்ளி விழா காண்கிறார்கள். இந்நன்நிகழ்ச்சியையொட்டி உங்களுக்கு வருகிறது
ரீகல் சொட்டு நீலம் வெள்ளி விழா போட்டி !

| | |
|---|---|
| முதல் பரிசு | : ஒரு 5பவுன் தங்க நெக்லஸ் |
| இரண்டாவது பரிசு | : ஒரு கலர் டி.வி. |
| மூன்றாவது பரிசு | : ஒரு ப்ரிட்ஜ் |
| நான்காவது பரிசு | : ஒரு வாஷிங் மெஷின் |
| ஐந்தாவது பரிசு | : மூன்று வெட்கிரைண்டர்கள் |
| ஆறாவது பரிசு | : நான்கு மிக்ஸிகள் |
| ஏழாவது பரிசு | : 990 நபருக்கு தலா 10 கிராம் எடையுள்ள வெள்ளி காசுகள் |

## போட்டியின் விவரங்கள்

1. டி.வி.யில் வரும் 'சொட்டு நீலம் டோய்...' விளம்பரப்படத்தில் மிகச் சிறந்த நான்கு காட்சிகளை குறிப்பிடுக.
2. இரண்டாவதாக பின் வரும் வாக்கியத்தை மொத்தம் 25 வார்த்தைகளுக்கு மிகாமல் பூர்த்தி செய்யுங்கள்
'நான் ரீகல் சொட்டு நீலம் உபயோகிப்பது ஏனென்றால் .......

இந்த இரண்டு கேள்விகளுக்கும் விடைகளை ஒரு போஸ்ட் கவரில் எழுதி கீழ்கண்ட முகவரிக்கு அனுப்புங்கள். கவரில் ''ரீகல் சொட்டு நீலம் வெள்ளி விழா போட்டி'' என்று குறிப்பிட வேண்டும். மறக்காமல் உங்கள் விலாசத்தையும் எழுதுங்கள்.

நிபந்தனைகள் :

எங்கள் நான்கு அளவுகளில் உள்ள ஏதேனும் ஒரு பாட்டிலில் உள்ள ஒரு ரீகல் சொட்டு நீலம் லேபிளை இணைத்து அனுப்பவும்
விடைகள் வந்து சேர வேண்டிய கடைசி நாள் : 31-1-1992
நடுவர்கள் தீர்ப்பே முடிவானது.

விடைகள் அனுப்ப வேண்டிய முகவரி :

The Southern India
Trading Agencies (India)
P.B. No.133,
Coimbatore - 641 001
Marketers of Regaul Blue
and Liquid Ultramarine Blue




ரீகல்

என்ன வெண்மையோ!
ஆஹா! என்ன வெண்மையோ!

SRI RAGHAVENDRA

**பொன்விழா ஆண்டு**

**தங்க நகைப் பரிசுப் போட்டி-2 முடிவு**

**ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன்நகை பரிசு பெறும் உண்மைக் கதை.**

# பவுனுப் பாட்டி

நான் குழந்தையாக இருக்கும்போது என் பாட்டி ஏராளமான நகைகளை அணிந்து கொண்டிருப்பாள். நானும் என் தங்கைகளும் அவளை, ''பவுனு பாட்டி'' என்றே அழைப்போம்.

இத்தனை நகைகள் இருந்தாலும் பாட்டிக்கு ஒரு தங்கச்செயினை மட்டுமே ரொம்பவும் பிடிக்கும். ஏனென்றால் தாத்தா முதன் முதலில் அதைத்தான் வாங்கிக் கொடுத்தாராம். 'மிகவும் ராசியான செயின்' என்று என்னிடமே பலமுறை சொல்லியிருக்கிறாள்.

தாத்தா இறந்து பல வருடங்களாகி விட்டன. பாட்டியின் எல்லா நகைகளும் குடும்பச் செலவு காரணமாகக் கரைந்து போய்விட்டன. என்றாலும் அந்த தங்கச் செயினை மட்டும் பாட்டி எப்போதும் கழுத்தை விட்டுக் கழற்றியதேயில்லை. அதற்கு ஒரு காரணத்தையும் சொன்னாள். அந்தச் செயினை வாங்கிவந்து கொடுத்த தாத்தா, ''இந்தாடி செல்லம்மா! இந்தச் செயினைக் கழுத்துல போட்டுக்கோ! எப்பவும் கழற்றாதே! நானா கேட்டாலொழியக் கழுத்தைவிட்டு எடுக்காதே'' என்று சொன்னாராம்.

எனக்குத் திருமணமாகி ஒன்பது ஆண்டுகள் குழந்தை இல்லை. பிறகு கடவுளின் கிருபையால் ஒரு பையன் பிறந்தான். அவன்மேலே பாட்டிக்குக் கொள்ளை ஆசை. ''என் மகராசா! என் ராசாவை (தாத்தா) அப்படியே உரிச்சுவச்சிருக்கியே'' என்று கொஞ்சிக் கொண்டேயிருப்பாள். ஒரு நாள் என் பையன், பாட்டியின் கழுத்திலிருந்த தங்கச் செயினைப் பிஞ்சு விரல்களால் பிடித்து இழுத்தான். பாட்டிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. ''என் ராசா! உனக்குத்தான்டா செயினு'' என்று சொல்லியபடி குழந்தையின் கழுத்தில் கழற்றிப் போட்டாள். ''ஏன் பாட்டி! தாத்தா சொன்னதை மீறிட்டீங்க?'' என்று கேட்டதற்கு ''நான் எங்கேடா மீறினேன். அவருதானேடா குழந்தை உருவத்துல வந்து கேக்கறாரு'' என்று நம்பிக்கையுடன் சொன்னாள்.

இன்று பாட்டி இல்லை என்றாலும், தாத்தாவும், பாட்டியும் எங்களுடனே இருப்பது போன்ற உணர்வை அந்த செயின் இப்போதும் எங்களுக்குத் தருகிறது.

- புதுச்சேரி, எம். வெற்றிவேலு.






## "அடுத்தவர் நகை"

எனது மாமாவே என் கணவராகி விட்டார். பெரிய விவசாயக் குடும்பம். எனவே என் கணவர் படித்துவிட்டு வேலை ஏதும் பார்க்காமல், விவசாயத்தையும் சரியாகக் கவனிக்காமல் ஜாலிப் பேர்வழியாகவே இருந்து வந்தார்.

ஒரு வெள்ளிக் கிழமை தாலிக் கொடியைத் தவிர மற்ற நகைகளை எல்லாம் கழற்றி வைத்து விட்டேன். என் கழுத்தைப் பார்த்த என் கணவருக்கு ஏக அதிர்ச்சி. ''என்ன இது வெள்ளிக் கிழமையும் அதுவுமா இப்படி நிற்கிறாய்?'' என்றார்.

நான், ''எத்தனை நளைக்குத்தான் அடுத்தவர்கள் நகையையே போட்டுகிட்டு இருக்கிறது?'' என்றேன். அவர் புரியாமல், ''என்ன சொல்கிறாய்?'' என்றார்.

''ஆமாங்க, 40 பவுன் என் அம்மா கொடுத்தது. 20 பவுன் உங்க அப்பா கொடுத்தது. இதில் நீங்கள் எதுவுமே கொடுக்கவில்லையே? நீங்கள் கொடுத்தால்தானே அது என் நகை என்று நான் கூற முடியும்'' என்றேன்.

ரோசக்கார என் கணவர் தாமே விவசாயம் செய்யத் தொடங்கினார். பாடு பட்டதில் முதல் வருடமே செலவு போக மீதியில் ஒரு மோதிரம் செய்து போட்டார்.

படிப்பும் அவருக்குத் துணைபுரிய இன்று அவர் மாவட்டத்தில் ஒரு சிறந்த விவசாயி. அம் மோதிரம் எனக்குக் கொடுத்த சந்தோஷத்தைப் போல் வேறு நகை எதுவும் அளித்ததில்லை.

- கமுதி, பி. சுப்புலெட்சுமி.

## பயிரா? படிப்பா?

முதன் முதலாகக் குடும்பத்தில் கல்லூரி வாயிலை மிதித்த மறுவருடமே எனக்குச் சோதனை!

தேர்வுக்கட்டணம் கட்டப் பணம் இல்லை. கூடவே தனியார் கல்லூரி தனிக் கட்டணமும் கேட்டு இம்சை. அதே நேரம் வயலில் உள்ள பம்புசெட் மோட்டார் தீப்பற்றி 'காயில்' போய்விட்டது.




மோட்டாரைச் சரிசெய்யவா... கல்லூரித் தேர்வுக்குப் பணம் கட்டுவதா...? அம்மாவை ஏறிட்டேன்!

''கல்வியே மிக முக்கியம்! அதற்கு உடனே இந்த நகைகளைப் பயன் படுத்து'' என்றாள். ''பயிர் பாழாப் போனா ஒரு போகம் மட்டும் நட்டம்! ஆனா படிப்பு பாழாப் போனா வாழ்க்கையே நட்டம்!'' என்றாள். அவளுடைய மூன்று கால் சாகைகள் வங்கியில் உறங்கின. பி.காம். தேர்வு எழுதினேன்!

அடுத்த ஒரு மாதம் விட்டு... விட்டு... நல்ல மழை. நெற்பயிர் பழுதுறாமல் அறுவடையானது. நகையும் மீண்டது!

என்னைப் படிக்க வைத்து ஒரு தனியார் நிறுவனத்தில் வேலையும் பெற்றுத் தந்த அந்த நகையைப் பார்க்கும் போதெல்லாம் கண்களில் நீர் சுரக்கும்!

- மேல்பட்டி, எல். மாறன்.

## "இது தெரிந்திருந்தால்.....!"

காதலித்துப் பெற்றோர்களின் எதிர்ப்




பையும் மீறித் திருமணம் செய்து கொண்டோம். என் பிறந்த நாளன்று, கணவர், எதிர்பாராத வண்ணம் எனக்கு அரைப் பவுனில் அழகிய மோதிரம் ஒன்றை அணிவித்தார். எனக்கு இன்ப அதிர்ச்சி. ''நான் கேட்கவேயில்லையே, ஏன் கஷ்டப்பட்டு இந்த மோதிரத்தை வாங்க வேண்டும்?'' என்றேன்.

அதற்கு அவர், ''ரீனா, உனக்கு நினைவு இருக்கிறதா! நமது திருமணத்திற்கு முன்பு, திருநெல்வேலியில் எனக்கு வேலை கிடைத்ததும், உன்னிடம் ஓடோடி வந்து, 'எனக்கு வேலை கிடைத்துவிட்டது. இனி அடுத்த வாரத்திலிருந்து உன்னை சனி, ஞாயிற்றுக்கிழமைகளில்தான் பார்க்க முடியும். உன் நினைவாக எனக்கு ஏதேனும் கொடேன்' என்றேன். உடனே நீ உன் கையில் கிடந்த சாதாரண கல் மோதிரத்தைக் கழற்றி, 'இதை வைத்துக் கொள்கிறீர்களா?' என்றாய். என் விரலில் நீயே போட்டு விட்டாய். அதற்குப் பதிலாகத்தான், உனக்கு இன்று இந்தத் தங்க மோதிரம்!'' என்றார்.

''இப்படி செய்வீர்கள் என்று தெரிந்திருந்தால், இரண்டு வருடத்திற்கு முன்பு, கல் மோதிரத்திற்குப் பதில், கழுத்தில் கிடந்த கவரிங் நகையை உங்களுக்கு அணிவித்திருப்பேனே!'' என்றேன். என் கணவர் பலமாகச் சிரித்தார்.

இன்று, வேறு பல நகைகள் இருந்தாலும், முதன் முதலாக அவர் தந்த மோதிரத்தைப் போற்றிப் பாதுகாத்து வருகிறேன்.

- வீரபாண்டியன் பட்டினம், ரீனா.

## ''அதிர்ஷ்ட செயின்!''

கல்யாணம் ஒன்றிற்கு பெங்களூர் போவதாகச் சொல்லி செயின் இரவல் கேட்டாள். நெருக்கம் காரணமாகக் கணவரைக் கூடக் கேட்காமல் ஐந்து பவுன் செயினைக் கொடுத்தேன்.

வருடங்கள் உருண்டன. சுபத்ரா திரும்பவில்லை. ஏமாந்து விட்டதை உணர்ந்தோம்!

காலப் போக்கில் செயின் விவகாரம் மறந்து போயிற்று.

முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது என் மகளின் திருமணத்துக்கு அழையா விருந்தாளியாக வந்திருக்கிறாள். வந்ததும் வராததுமாய் அதே ஐந்து பவுன் நகையை என் கழுத்தில் பலர் முன்னிலையில் போட்டாள். (மண) மகளுக்குச் சில



பென்ஸி அயிட்டங்கள் பரிசாக வழங்கினாள். செல்வப் பூச்சுப் பெற்ற பரிசுகள்!

சுபத்ராவும் கணவனும் மனம் விட்டுப் பேசினார்கள். வறுமை காரணமாக எங்கள் செயினை அடகு வைத்து, பம்பாய் சென்று, தொழில் செய்து இப்போது கார், பங்களா வசதியுடன் இருக்கிறார்களாம்! பம்பாயில் ஒரு குடும்ப நண்பர் மூலம் என் மகளின் திருமணம் பற்றிய செய்தி அறிந்து வந்ததாகச் சொன்னார்கள்.

''அதிர்ஷ்ட செயின், யாருக்கும் இரவல் கொடுக்காதீர்கள்,'' என்று கண் சிமிட்டிச் சொன்னாள், சுபத்ரா!

- ஈரோடு, என். குணவதி.

# குஷ்வந்த்சிங் ஜோக்ஸ்



'இந்தப் புத்தகத்திலுள்ள துணுக்குகளுக்கு நான் அதிகமாய்ப் பெருமை பாராட்டிக் கொள்ள முடியாது. பெரும்பாலும் வாசகர்களால் அனுப்பப்பட்டவை' என்று முன்னுரையில் கூறியுள்ளார் குஷ்வந்த்சிங். புத்தகத்தை, குஷ்வந்த்சிங் அனுமதியுடன், தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளது கண்ணதாசன் பதிப்பகம். (சென்னை 17) விலை ரூ. 18.

இந்தியாவுக்கு வந்த ஓர் அமெரிக்க டூரிஸ்ட், சர்தார்ஜி ஒருவரைத் தமது வழி காட்டியாய் அமர்த்திக் கொண்டார்.

செங்கோட்டையைக் கண்டு வியந்த அமெரிக்கர், ''இதைக் கட்ட எவ்வளவு வருடங்களாயிற்று?'' என்று கேட்ட போது, சர்தார்ஜி, ''இருபது வருடங்கள்'' எனப் பதிலளித்தார்.

''இந்தியர்கள் சோம்பேறிகள். அமெரிக்காவில் இதே கோட்டையை ஐந்து ஆண்டுகளில் கட்டி முடித்திருப்போம்'' என்றார் அமெரிக்கர்.

அடுத்து, தாஜ்மகாலைப் பார்த்த அமெரிக்கர் அதே கேள்வியைக் கேட்க, சர்தார்ஜி, உண்மையை மறைத்துப் ''பத்து ஆண்டுகள்'' என்றார்.

அதற்கும் அமெரிக்கர், ''அமெரிக்காவில் இதை இரண்டரை வருடங்களில் கட்டி முடித்திருப்போம்'' என்றார் கிண்டலாய்.

சர்தார்ஜிக்குக் கடும் எரிச்சல்.

டாக்ஸி குதுப்மினாரை நெருங்கிய போது, ''அது என்ன கோபுரம்?'' என்று கேட்ட அமெரிக்கருக்கு, சர்தார்ஜி கொடுத்த பதில், ''அங்கே போய்த்தான் விசாரிக்க வேண்டும்; நேற்று மாலை நான் இந்தப் பக்கமாய் வந்த போது, அந்தக் கோபுரம், அங்கே இல்லை!''

ஒரு சிறுவனைப் பள்ளியில் சேர்ப்பதற்காக அழைத்துக் கொண்டு போனார்கள். அதே பள்ளியில் இறுதி வகுப்பில் அவனுடைய அண்ணன் படித்துக் கொண்டிருந்தான்.

அண்ணன் சிறுவனை ''சொந்தத் தம்பி'' என்றான். ஆனால் சிறுவனோ, ''தூரத்து உறவு'' என்றான்.

பள்ளி நிர்வாகி, ''அவன் உன்னைச் சொந்தத் தம்பி என்கிறான்; நீயோ, அவனைத் தூரத்து உறவு என்கிறாயே!'' என்று கேட்ட போது, சிறுவன் சொன்னான் : ''எனக்கும், அவனுக்கும் இடையே ஒன்பது பேர் பிறந்திருக்கிறார்கள்; ஆகவே தான் தூரத்து உறவு என்றேன்.''

ஒரு பணக்காரச் சீமாட்டி, தன் நான்கு பிள்ளைகளும் அதிபுத்திசாலிகள் என்று பெருமைப்பட்டுக் கொண்டாள்.

''அப்படியெனில் ஐந்தாவது ஒன்று பெற்றுக் கொள்ள வேண்டியதுதானே?'' என்று அவர் கேட்ட போது கிடைத்த பதில்: ''இப்போதுதான் மக்கள் தொகை பற்றி ஒரு புத்தகம் படித்தேன். அதிலே உலகில் பிறக்கும் ஒவ்வொரு ஐந்தாவது குழந்தையும் சீனர்களாய் இருக்கும் எனப் போட்டிருந்தது!''

சுகாதார அமைச்சர் ஒரு புதிய ஆஸ்பத்திரியைச் சுற்றிப் பார்த்துக் கொண்டே வந்




தார். ஒரு பகுதிக்கு வந்ததும், ''இதுதான் லேபர் வார்டு'' என்றார் ஒரு டாக்டர். அமைச்சர் சொன்னார் :

''நான் அங்கே வர மாட்டேன். லேபருக் கென்றுதான் தனி அமைச்சர் இருக் கிறாரே...!''

இரண்டு பார்லிமெண்ட் உறுப்பினர் களின் மனைவிமார்கள் தங்கள் கணவர்கள் பற்றிப் பேசிக் கொண்டது.

''என் கணவர் ஒரு விஷயம் குறித்து ஒரு நாள் முழுக்கப் பேசினார் பார்லிமெண்ட் டில்.''

''பூ! என் கணவர் விஷயமே இல்லா மல் ஒரு நாள் முழுக்கப் பேசிக் கொண்டி ருந்தார் பார்லிமெண்ட்டில்.''

வெளிநாட்டிலிருந்த ஓர் இந்திய ரிடம் செலவுக்குப் போதிய பணமில்லை. மலிவான இந்திய ஓட்டல் ஒன்றைத் தேடிப் பிடித்து உள்ளே போனார்.

சீனா, ஐரோப்பா, இந்திய உணவு வகைகள் என மூன்று பிரிவுகள் இருந்தன.

இவர் இந்தியப் பிரிவினுள் நுழைந் தார்.

அங்கே சைவம், அசைவம் என இரண்டு பிரிவுகள் இருந்தன.

சைவப் பிரிவுக்குள் நுழைந்தார் மனிதர்.

அங்கே நெய், வனஸ்பதி என இரண்டு பிரிவுகள் இருந்தன.

வனஸ்பதி பிரிவில் நுழைந்தார்.

அங்கே ரொக்கம், கடன் என்று இரண்டு பிரிவுகள் இருந்தன.

கைக்காசு தராமல் சாப்பிடும் எண்ணத் தில் 'கடன்' பிரிவில் நுழைந்தார்.

அங்கே இன்னொரு போர்டில் ''வெளியே போகும் வழி'' என்று இருந் தது.

தொகுப்பு : ஜூலி.

---




❖ அயோத்தி பிரச்னையில் அரசியல் சட்டத்துக்குப் புறம்பாக உத்தர பிரதேச அரசு எதையும் செய்யாது.

- எல்.கே. அத்வானி

❖ ராஜீவ் காந்தி கொலைக்கும், விடு தலைப் புலிகளுக்கும் எந்தவிதத் தொடர் பும் இல்லை.

- எல்.டி.டி.ஈ. தலைவர் பிரபாகரன்

❖ மார்க்சியத்தைப் புறக்கணிக்க முடி யாது; அதைப் புதுப்பிக்க வேண்டும்.

- இந்திரா பார்த்தசாரதி, தினமணியில்

❖ சோனியா விரும்பினால், அவர் விரும்பும் பதவி அவருக்குத் தரப்படும்.

- வசந்த் சாத்தே (இ. காங்கிரஸ் தலைவர்)

❖ தேச மக்களின் நலன் தொடர் பான அத்தனை விஷயங்களிலும், எல்லாக் கட்சிகளின் ஒத்துழைப்பையும் நான் நாடுகிறேன். அது தவறா?

- பிரதமர் பி.வி. நரசிம்மராவ்

❖ அயோத்தியில் எப்பாடுபட்டே னும் ராமர் ஆலயம் கட்டப்படும். ஆனால் மசூதியை இடிக்கும் நோக்கம் எதுவும் எங்கள் கட்சிக்கு இல்லை.

- பாரதிய ஜனதாக் கட்சி எம்.பி. தீபிகா

❖ கோவிலோ, மசூதியோ, குருத்வா ராவோ அடுத்த ஐம்பது ஆண்டுகளுக்குக் கட்டா விட்டால், ஒன்றும் குடி முழுகிப் போய் விடாது. அவைகளுக்குப் பதிலாய் ஆஸ்பத்திரிகளைக் கட்டலாம்.

- உ. பி. முதல்வர் கல்யாண் சிங்.

தொகுப்பு : எஸ். வி. என்.

# THE COLTS MAN

கிழிப்படாத
கம்பீரம்!




VESTS
& BRIEFS



A Quality product from :
**VIJAYAKUMAR MILLS LTD**
Kalayamputhur Post, Palani, Tamil Nadu - 624 615.

Distributor for Madras : **Supreme Agencies,** 33, P.V.Koil Street Madras - 600 004
Distributor for rest of TN : **Priya Agencies,** 36, Saravana Street Ist Floor Udumalpet - 642 126

நீங்கள் கேட்டவை - தராசு

# ஆயிரம் கார் பவனியால் அரசுக்குச் செலவில்லையாமே?

●○ ஐ. எஸ். வாசு, மாடம்பிள்ளைதர்மம்.

? 'அறிவும் அழகும் உள்ள ஒரே முதல்வர் என்று ஜெயலலிதாவை இந்தி நடிகர் சத்ருகன் சின்கா வர்ணித்துள்ளாரே?

! சத்ருகன் சின்காவுக்கும் வயதாகிக் கொண்டு வருவதைக் காண்பிக்கிறது.

●○ அ. முஸ்தபா, தக்கோலம்.

? தமிழக அரசின் தற்போதைய ஸ்பெஷாலிடி என்ன?

! நேற்றைய ரேஷன் அரிசி விலை உயர்வு அறிவிப்பு; இன்று வாபஸ்.

●○ ந. இராமசாமி, கோவை.

? பிரதமரின் அதிகாரபூர்வ இல்லம் உள்பட நாடாளுமன்ற உறுப்பினர்களின் வீடுகளுக்கு இரு ஆண்டுகளில் எட்டுக் கோடி செலவு செய்யப்பட்டுள்ளது தேவை என்கிறீர்களா?

! சிக்கன உபதேசம் மக்களுக்குத்தான்; மந்திரிகளுக்கு அல்ல என்பதைத்தான் தினம் தினம் பல விஷயங்களில் பார்த்து வருகிறோமே. வி. ஐ. பி. பாதுகாப்பு, டெலிஃபோன் கட்டணங்கள், பெட்ரோல் செலவு இத்யாதிகளைப் பார்க்க இந்த எட்டு கோடி கொசுக்கடி.

●○ கே. பி. சாரதி, வேலூர்.

? உசிலை மணியின் இரு கால்களையும்....?

! குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்தவர், பாவம், நெகிழ நெகிழ சோகத்தில் ஆழ்த்துகிறார்.

●○ குணா, கீழ்வேளூர்.

? ஒரு நாள் திரைப்பட வசூலை, கோவிலுக்குக் கொடுப்பது பற்றி...?

! கட்டாய வசூலாக இல்லாதவரை எத்தனை நாள் வசூலையும் கொடுக்கலாம். கட்டாய வசூலுக்குத் தாம் உத்தரவிடவில்லை என்று முதல்வர் கூறுகிறார். ஆனால் முதல்வரைத் திருப்திப்படுத்த நினைப்பவர்கள், கட்டாய வசூல் செய்யவே செய்வார்கள். அதில் கொஞ்சம் கபளீகரம் ஆவதையும் தடுக்க இயலாது. எனவே முதல்வர், 'நன்கொடைகள் நேரடியாக இந்த நிதிக்கு அனுப்பப்பட வேண்டும்; வசூல் நடத்தும் யாரிடமும் தர வேண்டாம்; வசூலித்து அனுப்பப்படும் தொகைகள் ஏற்கப்பட மாட்டா' என்பதாக அறிக்கை விட வேண்டும்.

●○ ம. செந்தில்நாதன், மதுரை.

? ருஷ்யாவில் கம்யூனிஸம் அடைந்துள்ள வீழ்ச்சி, இந்திய கம்யூனிஸ்டுகளிடம் பாதிப்பு ஏற்படுத்துமா?

! ஏற்படுத்துமாவாவது? சி. பி. எம். மும் சி.பி.ஐ.யும் எதிரெதிர் நிலைகள் எடுத்து, அறிக்கைகள் விட்டுக் கொண்டிருக்கின்றனவே!

●○ சண்முக பாண்டியன், குருவிக்கொண்டான்பட்டி.

? பொன் விழாக் கவிதைப் போட்டி வைத்தீர்களே, முடிவுகள் வெளியாகிவிட்டனவா?

! பரிசீலனை நடந்து கொண்டிருக்கிறது. ஏராளக் கவிதைகள் வந்து குவிந்துள்ளதால் சற்றுத் தாமதமாகிறது.

●○ இரா. குமார், புதுச்சேரி.

? 'தம் பின்னால் கார்கள் வருவது, கட்சிக்காரர்களுடையது. இதனால் அரசுக்கு எந்தச் செலவும் இல்லை' என்று ஜெயலலிதா கூறியுள்ளாரே?

! அப்படிச் சொல்லி தப்பித்துக் கொள்ள முடியாது. வீண் பெட்ரோல் செலவு என்பது தனிநபர் நஷ்டமல்ல; தேசிய நஷ்டம். எனவே, 'ஆடம்பரம் வேண்டாம்; வீண் செலவு வேண்டாம்' என்று ஜெ அறிவுறுத்த வேண்டுமே தவிர, நியாயப்படுத்த முயற்சி செய்யக் கூடாது.

●○ எஸ். சுதாகர், ஈரோடு.

? 'விடுதலைப் புலிகளுடன் பேச்சு வார்த்தை

☛ அழகும் அறிவும்



☛ கனியும் வாய்ப்பு?



☛ நெகிழ நெகிழ....





☛ தயார் நிலையில்...



☛ கிடையவே கிடையாது!



☛ தெரியவே தெரியாது!



☛ தாக்காத அறிக்கை!

நடத்த நான் தயார்' என தொண்டைமான் கூறியிருப்பது பற்றி....?

! கை குலுக்க ஒரு வலக்கரம் போதாது; இரண்டு வலக்கரங்கள் தேவை.

●○ எம். இராஜேந்திரன், லால்குடி.

? உலகத் தலைவர்களில் ஒருவரை அநியாய மாகக் கொன்று விட்ட ஒருவனுக்கு அவனது திறமையைப் பாராட்டி நீங்கள் பத்திரம் வழங்குவது சரிதானா?

! அவனை ''சைத்தான்'' என்றுதான் நான் குறிப்பிட்டிருக்கிறேன். ''தேவதை'' என்று அல்ல. ராவணன், நாகநந்தி போன்றவர் களைச் செயல்களுக்காக நாம் வெறுக்கி றோம்; ஆனால் அவர்கள் ஆற்றலை வியக்கிறோம். திறமை, தவறான விதத்தில் பிரயோகமாகும் போது சாமர்த்திய வில்லன் உருவாகிறான். சினிமாக்களில் ஹீரோவுக்கு நிகரான அளவில் வில்லன்களை உருவாக்கு வது எதனால், யோசியுங்கள். ஒரு பிக்பாக் கெட் கேஸ் பிடிப்பதில் கார்த்திகேயனுக்கு என்ன பெருமை கிடைக்கும்?

●○ இரா. கிருஷ்ணன், புதுச்சேரி.

? 'சிவராஜனை யார் என்றே தெரியாது' என்று பாலசிங்கம் கூறியுள்ளது பற்றி?

! பிரபாகரனும்தான் 'ராஜீவ் கொலைக்கும் தமக்கும் எந்தவித சம்பந்தமும் கிடையாது' என்று கூறியுள்ளார். எல்லாம் 'அப்பன் குதிருக்குள் இல்லை' கதைதான்!

●○ எம். சிவகுமார், கொங்கணாபுரம்.

? நாட்டில் ஒழிக்க முடியாதது எது சார்?

! 'வறுமையா? லஞ்சமா?' என்று பட்டி மன்றம் நடத்தலாம் என்று பார்த்தால், 'என்ன நைனா, நம்மைக் கண்டுக்காமல் வுட்டுட்டியே?' என்று கேட்கிறார் இரு வாளர் கள்ளச் சாராயம்!

●○ பி. முனுசாமி, பெங்களூர்.

? ஒரு வருடத்துக்கு, பிறக்கும் குழந்தை களுக்கெல்லாம் 'ராஜீவ்' என்று பெயர் வைக்குமாறு வாழப்பாடியார் அறிக்கை விட்டிருக்கிறாரே?

! அப்பாடா! ஒரு வழியாக வாழப்பாடி யார், 'ஜெ'யைத் துதிபாடாத, மூப்பனார், ப.சி., தி.மு.க., இத்யாதியைத் தாக்காத ஓர் அறிக்கை விட்டு விட்டார்!

●○ கே. என். பாலகிருஷ்ணன், கும்ப கோணம்.

? பிரேம தாசா ஆட்சி கவிழும் வாய்ப்பு ஏற்படலாமா?

! 'தமது ஆட்சியைக் கவிழ்க்க முயற்சி செய்பவர்கள், சூதாட்டக் கேளிக்கை அரங்கு களுடன் தொடர்பு உடையவர்கள்' என்பது பிரேமதாசாவின் குற்றச்சாட்டு. 'இந்திய அமைதிப் படைக்கு எதிராகப் போரிட விடுதலைப் புலிகளுக்குப் பிரேமதாசா ஆயுதங்கள் வழங்கி உதவினார்' என்பது அவரை எதிர்ப்பவர்களின் பதில் குற்றச் சாட்டு. ஆக மொத்தத்தில், இந்தக் கவிழ்ப்பு நாடகத்தை ரசிக்கும் விடுதலைப் புலி களுக்குக் கொண்டாட்டம். அவர்கள் மேலும் பலம் பெற வாய்ப்பு.

●○ கே. எம். செல்வராசு, கரடிப்பட்டி ❑

? மின் கட்டணம் உயரும் அதே நேரத்தில் இலவச மின்சாரம் வழங்குவது பற்றி?

! கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைக்கிற கதையாக, விவசாயிகளிடம் நல்ல பெயர் வாங்க, பட்டணவாசிகளையும் தொழில் நடத்து வோரையும் தண்டிக்கிறது அரசு.

●○ டி. ரவீந்திரன், கடலூர்.

? சமீபத்தில் தங்களை அதிர்ச்சிக்கு உள்ளாக்கிய விஷயம்?

! தமிழக அரசின் தகவல் துறை இயக் குனராகச் சிறப்பாகப் பணியாற்றி, ஓய்வு பெற்ற கிருஷ்ணபாரதி, மாரடைப் பால் திடுமெனக் காலமான செய்தி அதிர்ச்சி எனில், அன்று மருந்துக் கடைகள் வேலை நிறுத்தத்தால் மூடப்பட்டிருந்ததால், உயிர் காத்திருக்கக் கூடிய மருந்து கிடைக்காமல் மடிந்தார் என்பது அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர்:
கே. எம். செல்வராசு,
கரடிப்பட்டி அஞ்சல்,
செல்லப்பம்பட்டி (வழி),
நாமக்கல் (வ) - 637 019.

# 50 ஆண்டுகளுக்கு முன்...

கல்கி 16.9.41 இதழ்....

## சர்ச்சில் சொல்லி விட்டார்!

இந்தியாவுக்கு அபாயமில்லை என்று கடைசியாக சர்ச்சில் வாயைத் திறந்து சொல்லி விட்டார்! இந்தியர்களுக்கு என்றென்றைக்கும் அபயம் தருவதாகவும் தைரியம் சொல்லி விட்டார். ''பிரிட்டிஷார் இந்தியாவுக்குச் சுதந்திரத்தைக் கொடுத்துச் சந்தியில் விட்டு விடுவார்களோ என்ற பயம் கொஞ்சமும் வேண்டாம்'' என்று அழுத்தமாய்ச் சொல்லி விட்டார்.

இந்த ஆனந்தத்தைக் கொண்டாட தேசத்தில் ஒரு முயற்சியும் இல்லாமல் இருப்பதுதான் நமக்குக் கொஞ்சம் உற்சாகக் குறைவை உண்டு பண்ணுகிறது. தேசமெங்கும் ஒரு நாள் ஹர்த்தால் நடத்தி, வேலை நிறுத்தம் செய்து, பொதுக் கூட்டங்கள் கூட்டி, சர்ச்சிலுக்கு வாழ்த்துக் கூறி ஏன் தீர்மானங்கள் நிறைவேற்றக் கூடாது? கோயில்களிலெல்லாம் மகானுபாவர் சர்ச்சில் துரையவர்களின் திருநட்சத்திரத்தைச் சொல்லி அபிஷேக ஆராதனைகள் நடத்தி, ஆலாட்ச மணி அடித்து, இப்படியெல்லாம் ஏன் கொண்டாடக் கூடாது? கஷ்டம் வந்தாலும், சந்தோஷம் வந்தாலும், எல்லாவற்றுக்கும் தேசத்தில் ஒரே துக்கந்தானா?

- தலையங்கத்தின் ஒரு பகுதி

## ஆகாச வெடி

''சுத்தத் தண்ணீர் பருகுவதே தேகத்துக்குச் சுகம்.''

-ஒரு ஆரோக்கியக் கட்டுரை.

''இந்த உண்மை குடித்தனக்காரர்களுக்கு எங்கே



தெரிகிறது?'' என்று பால்காரர் முணுமுணுக்கிறார்.

## அட்டைப் படம்




இவர் யார் தெரிகிறதா, இல்லையோ? தமிழ் நாட்டில் ஹிந்தி பாஷையின் மேல் மோகம் உண்டாவதற்குப் பெரிதும் காரணமாயிருந்தவர்களில் ஒருவர்; ஸ்ரீமதி சாந்தா ஆப்தே! இவருடைய ஹிந்தி பாட்டுகளும், ஹிந்தி டாக்கிகளில் இவருடைய நடிப்பும், தமிழ் நாட்டில் ஹிந்தி பிரசார சபைக்குச் சமமாக ஹிந்திப் பிரசாரம் செய்திருக்கின்றன என்று சொல்லலாம்! எனவே, தீவிரத் தமிழன்பர்களுக்கு இவர் மேல் கொஞ்சம் கோபம் வருவதற்கும் இடமுண்டு. அதற்குப் பரிகாரம் செய்ய ஸ்ரீமதி சாந்தா ஆப்தே இப்போது முன்வந்திருக்கிறார். தமிழ் பாஷை பயின்று, தமிழ் டாக்கியில் பேசிப் பாடியிருக்கிறார்.

## எதிர்ப்பு இயக்கம்

இப்போது நம்முடைய கவலையெல்லாம் தமிழ்ப் பாட்டை எப்படி வளர்ப்பது என்பதன்று; அதை எதிர்க்கிறவர்களின் பயங்களை எப்படிப் போக்குவது என்பது தான். எதிர்ப்புச் செய்கிறவர்கள் வெறும் வம்புக்காக எதிர்க்கிறவர்கள் அல்ல என்பதைக் கவனிக்க வேண்டும். உதாரணமாக, ஸ்ரீ டி. எல். வெங்கட்ராமய்யரை எடுத்துக் கொள்ளலாம். அவருடைய உயர்ந்த சங்கீத ஞானத்தையும், பக்தியையும் ஏழெட்டு வருஷமாக நான் அறிந்திருக்கிறேன். இவ்வருஷ ஆரம்பத்தில் அவர் மியூசிக் அகாடமியிலிருந்து ராஜினாமா செய்த விவரம் அறிந்த போது, ''அகாடமி கொடுத்து வைத்தது அவ்வளவுதான்!'' என்று எண்ணினேன். அத்தகையவர் வீண் வம்புக்காக இந்தச் சண்டையை ஆரம்பித்திருக்கிறார் என்று ஒருநாளும் சொல்வதற்கில்லை. உண்மையான பயம் ஏற்பட்டிருப்பதினால்தான் ஆரம்பித்திருக்கிறார்.

எதிர்ப்பு இயக்கத்தில் இன்னொரு பிரமுகர் ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார். இவருடைய எதிர்ப்பு எந்த இயக்கத்துக்குமே ஒரு பெரிய லாபம் என்று சொல்ல வேண்டும். ராஜாஜியிடமும் காங்கிரஸிடமும் இவருக்கு எவ்வளவோ அபிமானம் உண்டு. ஆனாலும், காங்கிரஸ் மந்திரி சபையை இவர் எதிர்த்து வந்தார். காரணம்,

எவ்வளவு நல்ல விஷயமாயிருந்தாலும் எதிர்க்கட்சி பேசினால்தான் நியாயா நியாயங்கள் சரியாக வெளியாகுமென்னும் எண்ணமாய்த்தானிருக்க வேண்டும். எனவே, தமிழ்ப் பாட்டு இயக்கத்தை எதிர்க்கிறாரென்றால், அவருடைய நோக்கத்தைப் பாராட்டி ஆட்சேபங்களுக்குச் சமாதானம் சொல்ல நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

- ஆடல் பாடல் - கர்நாடகம்

சிலேடைச் சித்திரம்

## தூக்கு தண்டனை !





ளும் சீதையின் கண்களும் ஒன்றையொன்று கவ்வி விழுங்கி விட்டனவாம்!

- கம்பர் தரும் காட்சி - டி. கே. சி.

### அண்ணலும் நோக்கினான்...

ஒரு வேடிக்கைக் கதை சொல்கிறது உண்டு. ஒரு கரும் பாம்பையும் மற்றொரு வெண்பாம்பையும் ஒரே கூட்டில் அடைத்து வைத்தார்களாம். இரண்டும் ஒன்றை ஒன்று, வாலைப் பற்றி விழுங்க ஆரம்பித்தன. இரண்டுக்கும் முதலில் கால்வாசி உடல், மற்றதன் வாய்க்குள் போய் விட்டது. பிறகு பாதி, அதன் பிறகு முக்கால், கடைசியில் முழுதுமே போய் விட்டது. கூட்டைத் திறந்து பார்த்த போது பாம்பே இல்லாமல் பூஜ்யமாய்ப் போய் விட்டதென்று கதை!

இம் மாதிரிதான் இராமனுடைய கண்க

### காப்பும் சங்கிலியும்

இதே திருச்சி சிறைவாசலுக்கு இருபது வருஷத்துக்கு முன் ஒரு தடவை வந்தேன். அதே வெறுப்பான தோற்றந்தான்; அதே புளிய மரங்கள்தான். நேற்றுத்தான் நடந்தவை போல் சில சம்பவங்கள் மனதில் பதிந்திருந்தன.

என்னுடைய தாயாரும் சித்தியும் என்னை 'இண்டர்வியூ' பார்க்க வந்திருந்தார்கள். நான் 'குவாரண்டை'னிலிருக்கும் போதே அவர்கள் வந்து விட்டபடியால் சிறை வாசலிலேயே இண்டர்வியூ நடந்தது. கால்களில் காப்பும் சங்கிலியும் குலுங்க, குறுக்குக் கோடு போட்ட குட்டைக் கைச் சட்டையும், முழங்காலுக்கு மேல் அதே துணியில் நிஜாரும் தரித்து அழகான கோலத்தில் வந்த போது, அவர்களுக்கு முதலில் என்னை அடையாளமே தெரியவில்லை. கிட்ட வந்து, ''அம்மா, சித்தி! என்னத்திற்காக இவ்வளவு அவசரப்பட்டுக் கொண்டு வந்தீர்கள்?'' என்று நான் கேட்ட போதுதான் அவர்களுக்கு என்னைத் தெரிந்தது. அம்மா ஒன்றுமே பேசத் தெரியாமல் திகைத்துப் போய் என்னைப் பார்த்தபடி நின்றாள். சித்தி, ''ஐயையோ! உன்னை இந்தக் கோலத்தில் பார்க்கத்தானா உன் அம்மா பெற்று வளர்த்தாள்?'' என்று அழத் தொடங்கி விட்டாள். நான் அவர்களைக் கொஞ்சம் சமாதானப்படுத்தி, ''அம்மா! நான் நகை போட்டுக் கொள்வதில்லையென்று நீ குறைப்பட்டாயல்லவா? இதோ பார் காப்பும் சங்கிலியும்!'' என்றேன். இந்த நகைச்சுவையை அவர்களால் அனுபவிக்க முடியவில்லை! அதையும் சோக ரஸமாகவே எண்ணி வருத்தப்படத் தொடங்கி விட்டார்கள்.

- மூன்று மாதம் கடுங்காவல் - ரா. கி.

# பெருவிரல் ரேகை பெரிய சந்தேகம்!



**வா**னொலியில் ''இன்று ஒரு தகவல்'' என்ற நிகழ்ச்சியில் ஆவணங்களில் இடது பெரு விரல் ரேகை எடுப்பதற்கான காரணங்கள் எடுத்துரைக்கப்பட்டன.

இதைக் கேட்ட உடனே, கல்கியில் சில மாதங்களுக்குமுன் திரு. சந்திரசேகர், ''படித்தவரும் வைக்கலாம் கை நாட்டு'' என்ற தலைப்பில் கூறியிருந்தவை நினைவுக்கு வந்தன. இரு கருத்துக்களுக்கும் இடையே முரண்பாடு இருப்பதைக் காண்கிறேன். உண்மை விளக்கம் என்ன?

- சென்னை - 7, தா. ராணி.

இது போன்று வேறு பல கடிதங்களும் கிடைக்கப் பெற்றதால் தடய அறிவியல் ஆய்வக இயக்குனர் டாக்டர் சந்திரசேகரை மீண்டும் அணுகிக் கேட்டோம். அவர் சொல்கிறார் :

விரல் ரேகை பற்றிய ஆய்வு நூல்கள், விளக்க நூல்கள் எதிலும், 'பிற விரல் ரேகைகளை விடுத்து இடது பெரு விரல் ரேகைப் பதிவு செய்வது ஏன்?' என்பதற்கு விளக்கமோ, அவ்வழக்கம் பற்றிய குறிப்போ ஏதும் இல்லை. கல்கியில் வெளியிடப்பட்ட எனது கருத்து ஒரு அனுமான விளக்கமே. அதே போல் வானொலியில் கூறப்பட்டுள்ள செய்தியும் ஒரு அனுமான விளக்கமே. வலக் கைவிரல் ரேகை உள்ள பள்ளம் மற்றும் மேட்டுக் குறிக்கோடுகள் (Ridges) சாதாரணப் பழக்கங்களினால் தேய்வு அடைகின்றது என்பது சிறந்த காரணமாகாது. ஏனெனில் மனித விரல் அமைப்பு அவ்விதமானது. விரல் தேய்மானத்தின் காரணமாகத் தான் இடது பெரு விரல் ரேகை ஆவணங்களில் பதிக்கப்படுகிறது என்பது விவசாயக் குடும்பங்களே நிறைந்த நம் நாட்டில் பொருந்தாது. இங்கு இரு கை கட்டை விரல்களும் சமமான அளவிற்கே தேய்வு அடையும் என்பது விளங்கும். ஆவணத்தில் அடையாளம் பெறுவதற்குமுன் எக்கட்டைவிரல் தேய்வு அடைந்துள்ளது என்பதைச் சரி பார்த்து அதன் பின்னர் தேய்வு அடையாத கட்டைவிரல் பதிவு செய்யும் பழக்கம் எங்கும் இல்லை.

ஆக வானொலி விவரமும் ஒரு அனுமான விளக்கமாகத்தான் தெரிகின்றது. அதில் எந்த ஒரு அறிவியல் அடிப்படையும் இல்லை.

இடது கைவிரல் ரேகைப் பதிவு செய்தல் காலப்போக்கில் வழக்கில் நிலைத்து நின்றுவிட்டபடியாலும், இன்றையக் காலத்தில் படிவங்களில் ''இடது கைவிரல் பதிவு'' என அச்சிடப்பட்டுவிடுவதாலும், இடது கைவிரல் பதிவு செய்தல் அங்கீகரிக்கப்பட்ட நிலை அடைந்துள்ளது.

இருபத்தைந்து ஆண்டுகளாகத் தடய அறிவியல் முதுகலை மாணாக்கர்களுக்கு கைவிரல், மற்றும் கால் தடயப் பதிவுகள் குறித்து விரிவுரை அளித்த ஆசிரியர் என்ற அனுபவம் மிக்க நிலையில், ஓர் அனுமான விளக்கமே கல்கியில் நான் வெளியிட்ட கருத்து. நான் வெளியிட்ட கருத்து தவறானதல்ல.

தங்கள் வாசகர்களின் ஊன்றிப் படித்து, விவரம் அறிய முனையும் ஆவலைப் பாராட்டுகிறேன்.

- சென்னை - 4, ப. சந்திரசேகரன்.

## வட்டமேஜை

◆ 'முக்கோணம்' தலையங்கத்தில் சுட்டிக்காட்டப்பட்டுள்ள குறைகளைக் குற்றச்சாட்டுகளாகக் கருதி விடாமல் அறிவுரைகளாகக் கருதித் திருத்திக் கொள்ள வேண்டும். அது நிச்சயம் ஆட்சியாளர்களுக்குப் பெருமை சேர்க்கக் கூடியதாகவே இருக்கும்.

கோணவட்டம், கே.ஆர். தேவேந்திரன்.

◆ முதல்வர் ஜெயலலிதா பற்றிய 'முக்கோணம்' தலையங்கம் ஏ.ஒன். தூள் கிளப்புகிறீர். ஆணி அடித்தது போல் சொல்லிவிட்டீர்கள்.

குமராட்சி, எம். பிரபு.

◆ 'ஆழ்கடல் முதல், விண்வெளி வரை...' அற்புதமான கட்டுரை. படித்துப் பட்டம் பெற்றுப் பணம் சம்பாதிக்க வேண்டும் என்றே வெளிநாடுகளில் குடியேறும் ஒரு சிலர் இருப்பினும், நமது ஆராய்ச்சியின் பயன் நமது நாட்டிற்கே கிடைக்க வேண்டும் என்கிற உயரிய நோக்கம் கொண்ட டாக்டர் மெஹர் பிரசாத்தும், மேரி சுகாசினியும், இளம் இந்திய விஞ்ஞானிகளுக்குச் சிறந்த கலங்கரை விளக்கங்கள்.

கும்பகோணம், கே.என். பாலகிருஷ்ணன்.

◆ 'வாடகை வீடுகளும், வேதனைக் கோடுகளும்' கட்டுரை ஒருதலைப் பட்சமாக இல்லாமல் இரு தரப்பு வாதங்களுடனும் அலசியிருந்த விதம் அருமை.

திருவெண்ணெய்நல்லூர், எஸ்.எஸ். பூங்கதிர்.

◆ கோதாவரி புஷ்கர வருணனை, சென்று அனுபவிக்கும் ஆசையை மனத்தில் வளர்த்து விட்டது. அரசின் ரயில் கட்டண உயர்வைப் பற்றிக் கட்டுரையில் கூட விடாமல் நையாண்டி செய்து விட்டீர்களே!

குமாரபாளையம், எம்.எஸ். முருகேசன்.

# ஆணி அடித்தது போல் தலையங்கம்

◆ ஷண்முகப்பிரியாவின் ''பிள்ளையார் சுழி'' சிறுகதை சிறந்ததொரு படிப்பினை. 'என்னால் என்பது கோடிப் பேரில் குறைந்த சதவிகிதத்தினரைத் திருத்த முடியாமல் இருக்கலாம். ஆனால் இது ஒரு பிள்ளையார் சுழி மட்டுமே என்ற வரிகள்' வைர வரிகள்.

தக்கோலம், அ. முஸ்தபா.

◆ பலரது உள்ளக் குமுறல்களை வெளிப்படுத்துவதாய் அமைந்திருந்தது ''பிள்ளையார் சுழி'' சிறுகதை. இக்கதைக்கு ஸ்யாம் வரைந்த ஓவியம் அருமை.

விசலூர் - 1, ஜி.ஜி. கிருஷ்ணன்.




◆ வைதேகி கல்யாணம் விமர்சனத்தில் 'தன் சகோதரி கணவனைப் போல் அல்லாமல்' என்று நீங்கள் குறிப்பிடுவது நளினியின் கணவர் ராமராஜன் என்று நினைக்கிறேன். ராமார்ஜுன் நளினியின் சகோதரர் அல்ல; ராதா- அம்பிகாவின் தம்பி. தவறாக எழுதிய உங்கள் தலைக்குப் பிடியுங்கள் என் குட்டு.

குடியாத்தம், ஏ. பூலோகசந்தர்.

◆ கிரிக்கெட் விளையாட்டில் சசின் டெண்டுல்கர் இந்த அளவிற்கு உலகப் புகழ் பெற்றதற்குக் காரணம் அவரது உடல் வலிமை மட்டும் அல்ல; அவரது விடாமுயற்சியும், தன்னம்பிக்கையும்தான் என்பதை இவ்வாரக் கல்கி மூலம் அறிந்து மகிழ்ந்தேன்.

லால்குடி, எம். இராஜேந்திரன்.

◆ சசின் டெண்டுல்கர் பற்றிய கட்டுரையில் இரு தவறுகள். சசின் ஃபெயிலானது +2 வில்தான். இந்தியக் கிரிக்கெட் அணி சுற்றுப்பயணம் செல்ல இருப்பது ஆஸ்திரேலியாவிற்கு. இங்கிலாந்திற்கு அல்ல.

சென்னை - 64, நீ. சூர்ய பிரகாஷ்.

◆ முதல்வரின் 'முதல் கோணலு'க்குத் தலையங்கம் எழுதத் தொடங்கிய கல்கி, 'முக்கோணலு'க்கு வந்திருக்கிறது. முற்றும் கோணல், தலையங்கம் எழுதும் கட்டாயம் கல்கிக்கு ஏற்படும் சூழ்நிலை வராமல் 'ஜெ' கவனத்துடன் செயல்படட்டும்.

காரைக்கால், ஆர். எஸ். இராஜ்.

◆ கடைசி பக்கத்தில் வெளியாகி இருந்த சிரிப்புத் துணுக்கிற்குப் (உடற்பயிற்சி) படம் தவறாக வரையப்பட்டுள்ளது. ஓவியத்திலும் ஏதேனும் தவறு கண்டுபிடிக்கும் போட்டி வைத்திருக்கிறீர்களா, என்ன?

சென்னை, ஜெயந்தி கணேஷ்.

◆ பி. வி. வி. ஐ. செய்த தவறுகளைக் காட்டிலும் நமது வங்கிகளின் தவறுகள் அதிகமே! போடாத ரோடு, வெட்டாத கிணறு, கறக்காத மாடு.... இப்படிப்பட்ட இத்யாதிகளுக்குத் தானே முன்னுரிமை தந்து கடன்கள் கொடுக்கப்பட்டுள்ளன!

மேல்பட்டி, எம். மாறன்.







# தூக்க மாத்திரைகளைத் தூர எறியுங்கள்!

"தூக்கமே வரமாட்டேங்குது டாக்டர்" என்று கெஞ்சிக் கேட்டுத் தூக்க மாத்திரை 'பிரிஸ்கிரிப்ஷன்' பலர் வாங்கி விடுகிறார்கள்.

ஆபத்து என்னவென்றால், தூக்க மாத்திரை பழகிப் போய் விட, அதற்குப் பலர் அடிமைப்பட்டுப் போகிறார்கள் என்பதே. கடைகளில் திறுக திறுசாகத் தூக்க மாத்திரைகள் விற்பனையாகின்றன.

இவர்களுக்கு விமோசனமே கிடையாதா? மருந்து இல்லாமலே இவர்களைத் தூங்கச் செய்ய முடியாதா? 'முடியும்' என்கிறார்கள் வாஷிங்டனில் ஆராய்ச்சி செய்யும் இரு டாக்டர்கள்.

'அடிப்படையான காரணத்தைக் கண்டு பிடித்துக் குணப்படுத்தாமல், மருந்துகள் கொடுத்துத் தாற்காலிகமாகத் தூங்க வைப்பது சரியல்ல' என்று இந்த இருவரும் கூறுவதாக, சமீபத்திய 'நியூஸ்வீக்' இதழ் தெரிவிக்கிறது. கிட்டத்தட்ட பாதிப்பேர், பாதிக்கப்பட்ட மனநிலையால்தான் தூக்கம் வராமல் தவிக்கிறார்கள்; மீதிப் பேர் தான் உடல் உபாதையால் உறக்கம் கொள்ளாமல் அவஸ்தைப்படுகிறார்கள் என்கிறார்கள் இந்த டாக்டர்கள்.

சென்னை மனநல மருத்துவர், டாக்டர் பொன்னுதுரை அவர்களிடம் விளக்கம் கேட்டோம் :

"காரணம் இருந்தோ, இல்லாமலோ பதற்றமான மனநிலை சிலருக்கு உண்டாகும். பணக்கஷ்டம், இப்படியா அப்படியா என்று முடிவெடுக்க முடியாத குழப்பமான சந்தர்ப்பங்கள்; என்ன ஆகுமோ, ஏது ஆகுமோ என்ற கவலையளிக்கும் நிலைமைகள் - இவற்றில் உறக்கம் வராது.

படு சுறுசுறுப்பாக அங்கே இங்கே ஓடியாடி, அதிகமாகப் பேசி, ரொம்பவும் 'ஆக்டிவ்'வாக இருக்கும் சில ஆசாமிகள் கூட தூக்கம் வராமல் அவதிப்படுவதுண்டு.

தூக்கத்தை இரண்டு வகைகளாகப் பிரித்திருக்கிறார்கள். NREM எனப் படும் வேக விழி அசைவு அற்ற உறக்கம், REM எனப் படும் விழியசைவு உள்ள உறக்கம். பின்னதில்தான் கனவுகள் வருகின்றன. தூக்கத்தில் ஐந்தில் ஒரு பகுதி இந்த வகையைச் சேர்ந்தது தான். நல்ல தூக்கத்துக்குக் கனவுகள் அவசியம்.

தூக்க மருந்துகள் செய்யும் வேலையை, அவை இல்லாமலே, இயற்கையான முறையிலும் செய்ய முடியும் என்பது, சமீப காலமாக நடந்து வரும் ஆராய்ச்சிகளின் முடிவு.

பதற்றமான மனநிலையுள்ள சமயத்தில், அந்த நபரை நன்றாக மூச்சை இழுத்து விடச் சொல்லியும், கைகால் தசைகளைத் தளர்த்தி, ரிலாக்ஸ் செய்து கொள்ளும்படியும் போதனை செய்யலாம். இவை TM, யோகா சார்ந்த பயிற்சிகளே.

எங்கெங்கோ மனம் அலைபாயும் நிலையைக் கட்டுப்படுத்தி, மனத்தை ஒரு நிலைப்படுத்தினால், இயற்கையாகத் தூக்கம் வர வாய்ப்பு இருக்கிறது.

சுய-ஹிப்னாடிச முறையிலும் இயற்கையாகத் தூக்கம் வரச் செய்யலாம். மனத்தைச் சிதறவிடாமல் ஒருமுகப்படுத்தி, 'இதோ எனக்குத் தூக்கம் வருகிறது; நான் தூங்கப் போகிறேன்; என் மனம் அலைபாயவில்லை; அமைதியாக இருக்கிறது; ஓம் சாந்தி.....!' என்று தானாகச் சொல்லிக் கொண்டே இருக்கிற போது உறக்கம் வந்து விடுகிறது."

'நியூஸ்வீக்' வேறு சில யோசனைகளையும் தருகிறது:

எத்தனை நேரம் கழித்துப் படுத்துக் கொண்டாலும் காலையில் ஒரே நேரத்தில் எழப் பழகிக் கொள்ளுங்கள்.

படுக்கப் போக மூன்று மணி நேரத்துக்கு முன் நிறைய தேகப்பயிற்சி செய்யுங்கள்.

பகலில் குட்டித் தூக்கத்துக்கு குட்பை சொல்லுங்கள். காப்பி, ஆல்கஹால், சிகரெட் இவற்றைப் படுக்கப் போகுமுன் தவிர்த்துவிடுங்கள்.

படுக்கையறையை ஆபீசாக மாற்றாதீர்கள். படுக்கையில் படுத்து டீவி பார்க்காதீர்கள்.

பதினைந்து நிமிடத்தில் தூக்கம் வரவில்லை என்றால், எழுந்து படியுங்கள், டீவி பாருங்கள்.

ரிலாக்ஸ்டாக இருக்கப் பயிலுங்கள். முடிந்தால் படுக்கப் போகுமுன் குளியுங்கள்; படியுங்கள்; கொஞ்சமாகச் சாப்பிடுங்கள்!

- எஸ். வி. என்



படம் : வேரா

# சாலையோரக் கொலு!

எழில் மிகுந்த விதம்விதமான பொம்மைகள் வரிசையாய் அணிவகுத்து நிற்கின்றன. பளிச்சென்று வண்ணங்கள். எங்கே இந்தக் கொலு? சைதாப்பேட்டை அண்ணா சாலை நடைபாதையில்தான்!

இவைகளைச் செய்பவர்கள் ராஜஸ்தான், குஜராத் மாநிலக் கலைஞர்கள். பரம்பரை பரம்பரையாய் இப்படி பொம்மை செய்து விற்று, பிழைப்பு நடத்துபவர்கள். சென்னையில் பல பகுதிகளிலும், பிளாட்பாரங்களில் ஜாகை. கூடாரமடித்துத் தங்கிக் கொண்டு, பொம்மை வியாபாரம் செய்து வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருக்கிறார்கள். இந்திதான் பேசுகிறார்கள். 'தமில் தோடா தோடா மாலூம்.'

தூத்துக்குடியிலிருந்து கிலோ எட்டு ரூபாய் என்று பிளாஸ்டர் ஆஃப் பாரிஸ் மாவு வாங்கி வருகிறார்கள். கொண்டு வரக் கூலி தனி. வெள்ளை நிற மாவு தண்ணீர் கலக்கப்பட்டுப் பிசையப்படுகிறது. இவர்களிடம் எல்லாவித பொம்மைகளுக்கும் அச்சு இருக்கிறது. முன் பகுதிக்கு ஒரு அச்சு. பின் பகுதிக்கு ஒன்று. இரு அச்சுகளிலும் பிசைந்த மாவை அடித்து, இரண்டையும் பொறுத்தி இறுக்கமாய்க் கட்டி வைத்து விடுகிறார்கள். ஒருநாள் முழுக்க அப்படியே வைத்திருந்து, மறுநாள் அச்சைப் பிரித்தால், பொம்மை ரெடி. இரண்டு நாட்கள் சூரியக் குளியல் செய்து பிறகு வண்ணம் பூசுகிறார்கள். இருபதி லிருந்து நூற்றைம்பது ரூபாய் வரை பொம்மைகள் இருக்கின்றன.

''ஆனாலும் உங்கள் ஊர்க்காரர்கள் பலர் அடிமட்ட விலை கேட்டு சுமையாய்ப் பேரம் பண்ணுகிறார்கள்'' என்கிறார் பிரகாஷ்.

''பிளாட்பார வாழ்க்கை அனுபவம் எப்படி?''

பிரகாஷின் சகா அல்சாராம், ''கோதுமை மாவு வாங்கி அடுப்பில் சுக்கா ரொட்டி சுட்டு சாப்பிட்டுக் கொள்வோம். கடையில் சாயா சாப்பிடுவோம். ஒரு பகுதி வருமானம் சாப்பாட்டுச் செலவுக்கு. இன்னொரு பகுதி பெயிண்ட், மாவு செலவுக்கு. மீதியைச் சேமித்து வைத்தால், ஊர் விட்டு ஊர் போகும் சமயத்தில் ஏற்படும் அதிகப்படிச் செலவைச் சமாளிக்க உதவும்'' என்கிறார்.

''வெளியூர்களில் உள்ள உங்கள் சொந்த, பந்தங்களுடன் எப்படி தொடர்பு கொள்ளுவீர்கள்?''

அவர் ஓர் இன்லாண்டு தபாலைக் கொடுக்கிறார். அதிலே எழுதப்பட்டுள்ள முகவரி :

கேர் ஆஃப் பிளாட்ஃபாரம்,
கால்நடை மருத்துவமனை,
மவுண்ட் ரோடு, சைதாப்பேட்டை,
சென்னை - 15.

இரவில் இரண்டிரண்டு பேராய்க் கண் விழித்துக் காவல் காக்கிறார்கள். எதற்கு? திருடு போவதை விட, தண்ணி கேஸ்கள் யாராவது வந்து, தடுக்கி விழுந்து, பொம்மைகளை உடைத்து விட்டால் என்ன செய்வது என்ற கவலைதான் அதிகமாம்!

- மௌஷ்மி.



# பாரதியார் பாடிய மணக்குள விநாயகர்

**பா**ண்டிச்சேரியை பிரெஞ்சு நாட்டினர் ஆண்ட போது அங்கிருந்த ஒரு பிள்ளையார் கோவிலை இடையூறாகக் கருதியதால் பிரஞ்சு கவர்னர் பிள்ளையாரைக் கொண்டு போய்க் கடலில் போட உத்தரவிட்டார். மறுநாள் பிள்ளையார் பூட்டிய கோவிலினுள்ளே வந்து உட்கார்ந்து கொண்டிருந்தாராம். இதே போல மூன்று முறை நடக்க,கவர்னர் மனம் மாறியதாம். பிள்ளையார் கோவில் இருந்த இடத்தை அவருக்கே சாசனம் செய்து கொடுத்ததுடன் நித்ய பூஜைகளுக்கும் ஏற்பாடு செய்தார். இதனால் இவருக்கு 'வெள்ளைக்காரன் பிள்ளையார்' என்று பெயர்! ஆனால் மணக்குள விநாயகர் என்ற பெயர்தான் பிரசித்தம்.



**ம**ணக்குள விநாயகர் காரணப் பெயராகும். கடற்கரை மணலும், அருகில் குளமும் சேர அமைந்ததால் (மணல்+குளம்) இப் பெயர் ஏற்பட்டது . பிள்ளையாருக்கு வலது பக்கம் 'குழி' (குளம்) உள்ளது. பக்கத்தில் வெகு அருகில் கடல் இருந்த போதிலும் சுத்தமான நீர் இதில் சுரக்கிறது. இதில் எது போட்டாலும் அதன் நிறம் கறுப்பாக மாறும். ஸ்வாமியின் கவசம் கூட வலது புறம் லேசான கறுப்பாயிருக்கும். தீராத நோய்களையும் தீர்ப்பது இந் நீர் என்று நம்பிக்கை.

கல்யாணமாகாமல் தடங்கல் ஏற்பட்டுத் தள்ளிக் கொண்டே இருப்பவர்களுக்கு - இவரை வேண்டிக் கொண்டு கல்யாண உற்சவம் செய்தால் திருமணம் விரைவில் முடியுமென்பர்.

**ம**காகவி பாரதியார் பாடிய திருத் தலம் இது :

''வாழ்க புதுவை மணக்குளத்து
வள்ளல் பாத மணிமலரே!
ஆழ்க உள்ளம் சலனமிலாது!
அகண்ட வெளிக்கண் அன்பினையே
சூழ்க துயர்கள் தொலைந்திடுக!
தொலையா இன்பம் விளைந்திடுக
வீழ்க கலியின் வலியெல்லாம்!
கிருதயுகந்தான் மேவுகவே.''

- வைதேகி தேசிகன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ.150/- விமானத் தபால்: ரூ. 350/-.

முற்றிலும் சிறந்த விவால்டி ரெடிமேடுகள் ஆடவர்களுக்காக.

ஷர்ட்ஸ், ட்ரௌஸர்ஸ், குர்தா பைஜாமாஸ், நைட்-சூட்ஸ், வெஸ்ட்ஸ் & ப்ரீஃப்ஸ் மற்றும் ப...மான இளைஞர் இளைஞிகளுக்குமானது

# விவால்டி

ரெடிமேடுகள்

**பாம்பே டையிங்**

ஸ்தாபிதம் 1879